இருந்தகாழியரே தூசரீரங்கோலியரேவண்ணா
வரும்பெருமஞ்சிகன் சீமங்கலிமாசுதிர்த்துத்
திருந்துமேனாதிமூன்றுஞ் சிறந்தநாவிதன்பேராகும்
பொருந்தரேவேதகாரர் போற்றுங்காருகாநெய்வார்பேர்

வண்ணார்பெயர்-காழியர்-தூசர்-ஈரங்கோலியர்-ஆக-௩-நாவிதன் பெயர்-பெருமஞ்சிரன் சீமங்கலி-ஏனாதி-ஆக-௩-வேதகாரர்பெயர்பொருந்தாக-நெய்வார்பெயர்-காருகர்-க ௩௩

பொல்லரேதுன்னரென்ப புகன்றதோற்றுன்னர்செம்மா
ருல்லியர்கூவநூலோ ரொளிவலைபோழ்நாதாமே
மெல்லியசங்கறுப்போர் சூனருன்விற்போரென்ப
சொல்லியபரம்பர்தாமே தோல்விலைமாக்களும்

௦ துன்னர்பெயர்-பொல்லார்-க-தோற்றுன்னர்பெயர்-செம்மார் க ௦ கூவநூலோர்பெயர்-உல்லியர்-க-சங்கறுப்போர்பெயர்- வலைபோழ்நர்-க-ஊன்விற்போர்பெயர்- சூரர்-க- தோல்விலை மாக்கள்பெயர் பறம்பர்-க ௩௪

கொலைஞரேகலைஞர்வங்கர் குணுங்கர்மாதங்கரோடு
புலைஞரேவிழிஞரேழ்பேர் பொருந்துசண்டாளர்நாம
முலவுசென்னியரேபண்ட ரோவர்வந்தித்துநிற்போர்
பலர்புகழ்மதங்கர்சூதர் பண்ணவர்பாணராமே

சண்டாளர்பெயர்-கொலைஞர்-கலைஞர்-வங்கர்-குணுங்கர்-மாதங்கர்புலையர்-இழிஞர்-ஆக-எ-பாணர்பெயர்-சென்னியர்-பண்டர்-ஓவர்-வந்துதித்துநிற்போர்-மதங்கர்-சூதர்-பண்ணர்-ஆக-எ ௩௫

சக்கிரிநந்திசெக்கான் றன்பெயராகுமென்ப
தொக்ககள்விற்போர்நாமஞ் சௌண்டிகர்துவசரோடு
தக்கதோர்பிழியர்மற்றும் படுவருஞ்சாற்றுமன்றே
மிக்கமீகாமநாம மீகரன்மாலுமிநீகானும்

செக்கான்பெயர்-சக்கிரி-நந்தி-ஆக-உ- கள்விற்போர்பெயர்- சௌண்டிகர்-துவசர்-பிழியர்-படுவர்-ஆக-ச-மீகாமன்பெயர்- மீகான்- மாலுமிநீடிகான்-ஆக-௩ ௩௬

மாவலர்வதுவரோடு வாதுவர்பண்ணுவார்பேர்
சோர்விலாப்பாகரேடா தோரணர்யானைப்பாகர்
காவலர்மெய்காப்பாளர் கஞ்சுகியென்றுங்காட்டு
மேவுகாரோடரென்ப வுறைநாரர்விதித்தபேரே

பண்ணுவார்பெயர்-மாவலர்-வதுடர்-வாதுயர்-ஆ-௩- யானைப்பகர்பெயர்-பாகர்-ஆலோரணர்-ஆக-உ-மெய்காப்பாளர்பெயர்-காவலர் கஞ்சகி-ஆக-உ-உறைகாரர்பெயர்-க-ரோடர்-க. ௩௭

---

௦ துன்னர்தையமகாரர்-௦கூவநூல்-நிழ்நீர்க்குறிபறியசாத்திரம்

தூயதேர்ப்பாகன்சூதன் வலவன்சாரதியுஞ்சொல்லும்
வேயர்சாரணரேயொற்றர் விதித்தபேர்மடையர்நாம
மேயவாலுவரேமிக்க கூவியரென்றுநூலே
யாவும்பானசிகரென்றும் பாசகரென்றுமாமே

தேர்ப்பாகன்பெயர்-சூதன்-வலவன்-சாரதி-ஆக-௩- ஒற்றர்பெயர்-வேயர்- சாரணர்- ஆக-உ- மடையர்பெயர்-வாலுவர் கூவியர்·பானசிகர் பாசகர்-ஆ-௬ ௩அ

நாடகர்கண்ணுளாளர் நடர்வயிரியாநிருத்தர்
கோடியர்பொருநர்கூத்த ரவிநயரென்றுங்கூறு
நீடியவாயிலோரே நெடுந்தமிழ்க்கூத்தரென்ப
ராடும்வேழம்பரென்பகழாயருக்கடுத்தநாமம்

கூத்தர்பெயர்-நாடகர்-கண்ணுளாளர்-வயிரியர்-நிருத்தர்- கோடியர்-பொருநர்-அவிநர்-ஆ-அ· தமிழ்கூத்தர்பெயர்- வாயிலோர்-க-o கழாயர்பெயர்-வேழம்பர் ௩௯

குயிலுவர்நரம்பினுய கருவியைகொளுத்துமாக்க
ளியலுந்தோற்கருவியாள ரியவராம்வெளியாட்டாளன்
சயமுறுதேவராளன் சாலினிதேவருட்டி
யபலவர்நொதுமாலாளர் வம்பலரென்றுமாமே

நரம்பினுய கருவியைக் கொளுத்து மாக்கள்பெயர்- குயிலுவர்-க-தோற்கருவியாளர்பெயர்-இயர்-க- வெறியாட்டாளன்பெயர்- தேவருளன்-க-தேவருட்டியின்பெயர்-சாலினி-க-அயலவர்பெயர்- நொதுமலாளர்-வம்பலர்-ஆ-௩ ௪௰

புதியவர்விருந்தோரென்ப வதிதிவம்பலரும்போற்றும்
பதிகனேவழிச்செல்வோனும் வியவனேயேவுவான்பேர்
முதுவாமூதுணர்ந்தோர்நாமங் கிழவரேரியுமோர்போரா
மதிகமாங்குறிக்கோள்வோர்வா ராயணரென்பதாமே

புதியவர்பெயர்-விருந்தோர்-அதிதி- வம்பலர்-ஆ-௩- வழிச்செல்வோன்பெயர்-பதிகன்-க-ஏவுவான்பெயர்-வியவன்-க மூதுணர்ந்தோர்பெயர்-முதுவர்-க-உரியோர்பெயர்-கிழவர்-க- குறிக்கோள்வோர்பெயர்-பராயணர்-க ௪க

வித்தகர்வினைபுரைப்போர் விதியுளிவழியுரைப்போ
ருத்தமமானபண்புற் றுறைப்பவர்தூதராகுந்
தொத்தொழுகிணகர்தாசர் தொழும்பொடுதொருவிருத்தி
யத்தகுதொண்டுசேட ராளிவையடிமையாமே

---

o கழாயர்-கழைக்கூத்தர்

தூதர்பெயர்-வித்தகர்-வினையுரைப்போர்-வழியுரைப்போர்-பண்புரைப்பவர்-ஆ-௪-அடிமையின்பெயர்தொத்து-கிணகர்-தாசர்தொழும்பு-தொறு-விருத்தி-தொண்டு-சேடர்-ஆள்-ஆக-௯ ௪௨

சிலதனே நண்பன்பாங்கன் சேடனே துணைவன்றோழ
னெலுவனுமாமிவன்முன் னிலைப்பெயரேடாவென்ப
சிலதியேசகியேபாங்கி சேடியேயிகுளைதோழி
நலமுறுமுன்னிலைப்போர் நாடின்மற்றேடியல்லா

தோழன்பெயர்-சிலதன்-நண்பன்-பாங்கன்-சேடன்- துணைவன்-எலுவன்-ஆ-௬-தோன்முன்னிலைப்பெயர்-ஏடா-௧-தோழிபெயர்-சிலதிசகிபாங்கி-சேடி-இகுளை-ஆக-௫- தோழி-முன்னிலைப்பெயா-ஏடி-எல்லா. ௪௩

அந்தகன்சிகடனென்ப குருடனுங்கோணல்கூன்பேர்
சிந்துவாமனமேகுஞ்சங் குறள்வதிர்செவிடன்றாகு
முந்தியமுடமேபங்கு குணியூமைமூகைமூங்கை
தந்தபெண்டகனேபேடி நபுஞ்சகனலியேசண்டன்

குருடன்பெயர்-அந்தகன்-சிதடன்-ஆக-௨-கூனின்பெயர்-கோணல்-௧-குறளின்பெயர்-சிந்து- வாமனம்- குஞ்சம்-ஆக-௩- செவிட்டின்பெயர்-வதிர்-௧-முடத்தின்பெயர்-பங்கு-குணி-ஆக-௨-ஊமையின்பெயர்-மூகை-மூங்கை-ஆ-௨-அலியின்பெயர்- பெண்டகன்-பேடி- நபுஞ்சகன்-கண்டகன்-ஆக-௪ ௪௪

சாதகன்சாருகன்றன் கடுங்கொலையாளிநாமம்
வேதனைசெய்வோன்பேரே யருந்துதன்விளம்பலாகும்
பீதனேசகிதனோடு பீருவுமசசமுள்ளோ
னோதியசவனன்வேகி யற்றவஞ்சகனிசாதன்

கொலையாளியின்பெயர்-சாதகன்-சாருகன்-ஆக-௨-வேதனை-செய்வோன்பெயர்-அருந்துதன்-௧- அச்சமுள்ளோன்பெயர்-பீதன்- சகிதன்-பீரு-ஆக-௩-வேதியின்பெயர்-சவநன்-௧-வஞ்சன்பெயர்-நிசாதன்

படிறர்பல்லவர்பரத்தர் பகரிடங்கழியரோடு
விடருங்காமுகருந்தூர்த்தர் மிக்கநாகரிகரென்பே
கடிநகர்ப்பதிவாழ்கின்ற சதுரர்காமுகரென்றும்பே
ரடைவுளராமமுற்றோன் கிராமியனாகுமன்றே

தூர்த்தர்பெயர்-படிறர்-பல்லவர்பரத்தர்-இடங்கழியர்-விடர்-காமுகர்-ஆக-௬-நாகரிகர்பெயர்-சதுரர்-காமுகர்-ஆ-௨-கிராமமுற்றோன்பெயர்-கிராமியன்-௧ ௪௬

வலவைவல்லுனனேவல்லோன் மாட்டார்பேர்வல்லாரென்ப
குலமுளோன்குலீனனுநு கரியவன்குறித்தகள்வ
னுலவுநோயுற்றொழிந்தோ னுல்லாபன்பதா திகாலா
ளலைவில்வில்சங்கத்தனென்ப தாயத்தமானேன்பேரே

வல்லோன்பெயர்- வலவை- வல்லுநன்- ஆக-௨- மாட்டார்பெயர் வல்லார்-௧-குலமுளோன்பெயர்-குலீநன் ௧-கரியின்பெயர்-கள்வன்-௧-நோயுற்றொழிந்தோன்பெயர்- உல்லாபன்-௧-காலாளின்பெயர்- பதாதி-௧-ஆயுத்தமானேன்பெயர்-சங்கத்தன்-௧ ௪௭

மந்தனேகூர்மையில்லோ னக்கனிர்வாணிநாமம்
வெந்திறலியவுளென்ப மிகுபுகழாளன்பேரே
புந்தியவருளோனேகா ருண்ணியனென்பமேட்டர்
வந்திகன்கவிகள்கற்றோர் வண்டரேகடிகைமாக்கள்

மந்தன்பெயர்கூர்மையில்லோன்-௧-நிர்வாணியின்பெயர்-கக்கன்-௧ மிகுபுகழாளன்பெயர்-இயவுள்-௧-அருளோன்பெயர்- காருண்ணியன் ௧ 0 கடிகைமாக்கள்பெயர்-ஏட்டர்-வந்திகள்கவிகள்- கற்றோர்வண்டர்-ஆக-௫ ௪௮

புரவலநீகையாளன் போற்றுவேளாளன்றியாகி
யரைகெழுவேள்வியாள னுபகாரிகொடையுளோனும்
வறைவறக்கொடுத்தளிப்போன் வள்ளியோனென்றுகூறு
மிறவலன்பரிசிலாளன் யரசகன்றீனனேற்போன்

கொடையுளோன்பெயர்- புரவலன்-ஈகையாளன்-வேளாளன்-தியாகி-வேள்வியாளன்-உபகாரி-ஆக-௬-வரைவறக்கொடுத்தளிப்போன்பெயர்- வள்ளியோன்-௧-ஏற்போன்பெயர்-இறவலன்-பரிசிலாளன் யாசகன் தீனன்-ஆக-௪ ௪௯

கரவடர்சோரர்தேனர் பட்டிகர்புரையோர்கள்வர்
திருடராந்தரித்திரன்பேர் செப்பிடிமகிஞ்சன்பேதை
மருவுநல்கூர்ந்தோனில்லோன் வறியனுதுலனேயேழை
விரவியவுறுகணாள னிலம்பாட்டோனமிடியனுமம்

திருடர்பெயர்-கரவடர்-சோரர்தேனர்-பட்டிகர் புரையோர்கள்வர்-ஆக-௬-தரித்திரன்பெயர்- அகிஞ்சன்-பேதைநல்கூர்ந்தோன்- இல்லோன்-வறியன்-ஆதுலன்-ஏழை-உறுகணாளன்- இலம்பாட்டோன்மிடியன்-ஆக-ம ௫௰

வயவனேதிறலோன்மற்றை வண்டனேமிள்ளன்மன்றன்
வியவனேவிருளோன்மீளி-வீரனே திண்ணியன்பேர்
நயமில்கூளியரேருளர் நாட்டும்வாலுழவர்மள்ளர்
சயமிகுமறவர்தானைத் தலைவராம்படருமாமே

---

0 கடிகைமாக்கள் மங்கலப்பாடகர்

திண்ணியன்பெயர்-வயவன்-திறலோன்-வண்டன்-மிண்டன்-மள்ளன்-வியவன்-விறலோன்-மீளி-வீரன்-ஆக-௯-தானைத்தலைவர் பெயர்-கூளியர்-ஏருளர்வாளுழவர்-மள்ளர்-மறவர்-படர்-ஆக-௯ ருக

அரிகளேசெருநர்சோர ரமரருள்ளாரேநள்ளார்
மருவலர்தெவ்வர்மாணர் மாற்றலர்மன்னரொன்னர்
தரியலரொட்டார்வடகார் சார்பிலார்மற்றூர்செற்றூர்
பாரொடுகேளாரல்லாற்பகைவர்பேரெழுமூன்றுமே

பகைவர்பெயர் அரிகள்-செறுநர்சோரர்-அமரர் உள்ளார்-நள்ளார் மருவலர்-தெவ்வர்-மாணர்-மாற்றலர்-மன்னர்-ஒன்னர்-தரியலர் ஒட்டார்-வட்கார்-சார்பிலார்-பற்றூர்-செற்றூர்-பரர்-கேளார்-ஒல்லார்-ஆக-உக ருஉ

ஒல்லுநர்தொடர்ந்தார்சேர்ந்தா ரொட்டுநர்பெட்டர்வேட்டார்
புல்லுநர்பசைந்தார்மித்திரர் புரிந்தாரார்வலர்விழைந்தார்
நல்லவர்காதலித்தார் நள்ளுநாநயர்ந்தார்கூட்ட
மெல்லவொன்றுணர்மூவாறு மேருநர்நாமமாமே

மேவினர்பெயர்-ஒல்லுநர்-தொடர்ந்தார்-தேர்ந்தார்-ஒட்டுநர்-பெட்டார்-வேட்டார்-புல்லுநர்-பசைந்தார்-மித்திரர்-புரிந்தார்-ஆர்வலர் விழைந்தார்-நல்வர்-காதலித்தார்-நள்ளுமர்-நயந்தார்-கூட்டம்-ஒன்றுநர்-ஆக-௰அ ருரு

உற்றவரிகுளைநட்டோ றுறவொக்கல்கிளையேசார்ந்தோர்
பற்றினர்சிறந்தோர்நட்புப் பந்தமேபரிசனங்கேள்
குற்றமினண்புகூளி குடும்பமேகடும்புநள்ளி
சுற்றமூவாறுபேருஞ் சூழந்தபாசனமுஞ்சொல்லும்

சுற்றத்தின்பெயர்-உற்றவர்-இகுளைநட்டோர்-உறவு ஒக்கல்-கிளை சார்ந்தோர்-பற்றினர்-சிறந்தோர்-நட்பு-பந்தம்-பரிசனம்-கேள்-நண்பு கூளி-குடும்பம்-கடும்புநள்ளி-பாசனம்-ஆக-௰௯ ருச

பொறியிலார்கயவர்நீசர் புள்ளுவர்புல்லர்தீயோர்
சிறியசிந்தையர்கனிட்டர் திக்குணர்திம்பர்தேரர்
முறையிலார்முசண்டர்மூர்க்க முசுடர்பல்லவரேகையர்
மறையிலாக்கலர்மூவாறு மன்னுபூரியருங்கீழோர்

கீழோர்பெயர்-பொறியிலார்-கயவர்-நீசர்புள்ளுவர்-புல்லர்தீயோர் சிறியசிந்தையர்கனிட்டர்-திக்குணர் திம்பர்-தேரார்முறையிலார்முசண்டமூர்க்கர் முசுடர்-பல்லவர்-கையர்-கலர்-பூரியர்-ஆக-௰௯ ருரு

முழுமகன்சிதடன்பேதை மூடனேமண்ணைபஞ்சை
யிழுதையேமடனேபாத னேழையேயறிவிலான்பேர்
தொழுவர்தம்மியரேமற்றைத் தொழில்செய்வோர்நாமமாகும்
வழுவிலாவாயிலாளர் வாயில்காப்போர்தம்பேரே

அறிவிலான்பெயர்- முழுமகன்-சிதடன்-பேதை- மூடன்-மண்ணை அஞ்ஞை-இழுதை-மடன் ஆதன்- ஏழை-ஆக-௰-தொழில்செய்வோர் பெயர் தொழுவர்- கம்மியர்-ஆக-௨-வாயில்காப்போர்பெயர் வாயிலாளர்-௧ ௫௬

அரிவையங்கனைமடந்தை யாடவளாட்டிமாயோன்
சுரிகுழன்மகடுவுக்காந்தை சுந்தரிவனிதைமாது
தெரிவைமானினியேநல்லாள்சிறுமியேதையனாரி
பிரியைகாரிகையணங்கு பிணாப்பெண்டுபேதைபெண்பேர்

பெண்பெயர்- அரிவை-அங்கனை- மடந்தை-ஆடவள்- ஆட்டி-மாயோன் சுரிகுழல்-மகடுவு-காந்தை-சுந்தரி-வனிதை-மாது தெரிவை மானினிநல்லாள்- சிறுமி- தையல்நாரி- பிரியை- காரிகை- அணங்கு பிணா-பெண்டுபேதை-ஆக-௨௪ ௫௭

ஆடவன்மைந்தன்காளை யாடுவேமகன்புமானே
நீடியகுமரனேழு நிருமித்தபுருடநாம
நாடியநம்பியோடு நங்கையென்றிரண்டாண்பெண்ணை
தேடியகவிகளெல்லாஞ் சிறப்பிக்குநாமமாமே

புருடன்பெயர்-ஆண்டவன்-மைந்தன்-காளை-ஆடுமகன் பூமான் குமரன்-ஆக-எ-ஆணைச்சிறப்பிக்கும்பெயர்-நம்பி-க-பெண்ணைச்சிறப்பிக்கும்பெயர்-நங்கை-க ௫௮

பேதையேபெதும்பைமங்கை பெருகியமடந்தையோடு
திதிலாயரிவைமற்றைத் தெரிவைபேரிளம்பெண்ணென்ப
வேதமில்பருவமுண்டே ழெய்துபன்னொன்றுபன்மூன்
றேதுபத்தொன்பானையந் துடன்முப்பத்தொன்றெண்ணக்கே

பெண்பாற்குறியபருவமாவன-பேதை-பெதும்பை மங்கை-மடந்தை-அரிவை-தெரிவை-பேரிளம்-பெண்முறையே யிவற்றினாண்டா வன்-எ-௰க-௰௩-௰௬-௨௫-௩௧-௪௰ ௫௯

முன்னியகைம்மைபெற்றேன் மொழிந்தகோளகனேயாகும்
பின்னைவேற்றேற்குப்பெற்ற பிள்ளைகுண்டகனேயென்ப
பன்னிவாழ்க்கைப்படாமுன் படர்ந்தோருகளவினாலே
கன்னியேபெற்றபிள்ளை காநீநேயென்றேயோதும்

கைம்மைபெற்றேன்பெயர், கோளகன்-க-வேற்றேற்குப்-பெற்ற பிள்ளையின்பெயர்- குண்டகன்-க-கன்னிபெற்ற- பிள்ளையின்பெயர்- காநீநம்-க ௬௰

உயர்ந்தநாற்குலத்திலாண்பெண் ணுயர்விழிவிரண்டுங்கூடி
யியங்கியபிள்ளைப்பேரே யநுலோமனென்றுகூறு
நயந்தவப்பெண்ணுமாணு நண்ணிபஉயர்வுதாழ்வில்
வியந்திடப்பிள்ளைப்பேரே விறப்பிறதிலோமனுமே

உயர்ந்தநாற்குலத்துளுயர்குலத்தானு மிழிகுலப்பெண்ணுங்கூடிப்பிறந்தபிள்ளையின்பெயர் அநுலோமன்-க-உயர்குலப்பெண்ணு மிழிகுலத்தானுங் கூடிப்பிறந்தபிள்ளையின்பெயர்-பிரதிலோமன்

பெருத்தவல்லனுமோமன்னே பிரதிலோமனென்றபேரி
லுரைத்தவாண்பெண்ணிலவந்தே யுற்றவனந்தராள
னிறைத்தவர்மாறிக்கூடிப் பிறந்தவனீண்டபேரே
விரித்ததுவிளவிக்கேட்கில் விராத்தியனென்னு நூலே

அவ்வநுலோமத்தாணிலும்பிரமதிலோமப் பெண்ணிலும்பிறந்த பிள்ளையின்பெயர்அந்தராளன் க அநுலோமப்பெண்ணும்பிரதிலோமத்தானுங் கூடிப்பிறந்தபிள்ளையின்பெயர்-விராத்தியன்-க   சுஉ

முந்தியகுரத்தியத்தை முதல்விகோமாட்டியாசா
டந்திடுமிரவிடைய சாமியேதலைவிநாம
நந்தியபிண்டிவாம னன்னெறிவழாதுநோற்பாள்
கந்தியேயௌவையம்மை கன்னியேகௌந்தியென்ப

தலைவியின்பெயர்-குரத்தி அத்தை-முதல்வி-கோமாட்டி-ஆசாள் இறைவி- ஐயை-சாமி-ஆக-அ-நோற்பாள்பெயர்- கந்திஔவை- அம்மைகன்னிகௌந்தை-ஆக-டு   சுங

கைம்மையேகைனிபூண்ட கலன்கழிமடந்தையேந்தி
விம்மியவிதவைநான்கே யமங்கலைவிளங்குநாம
மைம்மையேவந்தியென்ப மலடிக்குவகுத்தபோரு
செம்மையாங்கோலஞ்செய்வா டிகழ்வண்ணமகளேயென்ப

அமங்கலையின்பெயர்-கைம்மை- கைகனி-கலன்கழிமடந்தை-விதவை-ஆக-ச-மலடின்பெயர்-மைம்மை-வந்தி-ஆக உ கோலஞ்செய்வாள்பெயர்-வண்ணமகள்-க   சுச

பரத்தையேகணிகைகூளை பயனிலாள்வரவின்மாது
பொருட்பெண்டுபெருவகொள்வாள் விலைமகள்போற்றும்வேறு
விருத்தையேமூத்தாளென்ப மின்னிடைக்குமரிகன்னி
நிருத்தஞ்செய்மாதுகூத்தி நாடகக்கணிகைநீள்பேர்

வேசையின்பெயர்-பரத்தை- கணிகை-கூளை-பயனிலாள்-வரைவின்மாது-பொருன்பெண்டு-பெறுவகொள்வள்-விலைமகள்-ஆக-அ மூத்தவள்பெயர்-விருத்தை-க-குமரியின்பெயர்- கன்னி-க-நாடகக்கணிகைபெயர்-நிருத்தமாது-கூத்தி-ஆக-உ   சுரு

குட்டனிதொழுத்தைகூளி குறளிதேபடுவிகுண்டம்
துட்டையேயச்சியாகுஞ் சூழ்திடும்யுவதியேயி
ரெட்டாண்டிற்பெண்மதங்கி யெய்தியவிரலியென்ப
இட்டமாம்பாடுவிச்சி தம்பதியிரட்டையாண்பெண்

ஆசதியின்பெயர்-குட்டன்-தொழுக்கை-கூளி-குறளி-படுவி-குண்டம்-துட்டை-ஆ-எ-பதினாறாண்டிற்பெயர்-யுவதி-௧-பாடுவிச்சி பெயர்-மதங்கி-விறலி-ஆ-௨-தம்பதியின்பெயர்-இரட்டை-ஆண்பெண்-ஆக-௨. ௬௬

குறவர்கானவரேமள்ளர் குன்றவர்புனவரோடு
மிறவுளகுறிஞ்சிதன்னி லின்புறுமாக்கள்பேரே
குறிபறிகுறத்திமற்றைக் கொடிச்சிபண்ணிறைவன்றானே
திறன்மிகுமலையன்வெற்பன் சிலம்பன்கானகநாடன்பேர்

குறிஞ்சிநிலமாக்கள்பெயர்-குறவர்-சானவர்-மள்ளர்-குன்றவர்-புனவர்-இறவுளர்-ஆக ௬-குறிஞ்சிநிலப்பெண்பெயர்-குறத்தி-கொடிச்சி-ஆக ௨-குறிஞ்சி-நிலத்திறைவன்பெயர்-மலையன்-வெற்பன்-சிலம்பன்-கானநாடன்-ஆக-௪, ௬௭

கோளுறுமறவரோடு மெயினரேகுறித்தபாலை
யாளர்புள்ளுவரிறக்க ரனைத்துமாமவரோடாடும்
வாள்விழியெயிற்றிவன்கட் பிணாவொடுமறத்தின்பெண்பேர்
மீளிபேகாளையென்ப விடலையுந்தலைவனாமம்

பாலைநிலமாக்கள்பெயர்-மறவர்-எயினர்-புள்ளுவர் இறக்கர்-ஆக-௪ பாலைநிலப்பெண்பெயர்-எயிற்றி-வன்கட்பிணா-மறத்தி-ஆக-௩-பாலைநிலத்தலைவன்பெயர்-மீளி-காளை-விடலை-ஆக-௩, ௬௮

குறவர்மாகுலவர்வெய்ய குன்றவர்கிராதர்மற்றை
மறவர்கானவரேதிய வனசரர்சவரர்சொல்லு
முறையழிகொலைஞர்பாவ மூர்த்திகண்முருடர்சற்றும்
பொறையிலாரெயினர்வேடர் புளிஞரீரேழ்பொதுப்பேர்

புளிஞர்பொதுப்பெயர்-குறவர்-மாகுலவர்-குன்றவர்-கிராதர்-மறவர்-கானவர்-வனசரர்-கவரர்-கொலைஞர்-பாவமூர்த்திகள்-முருடர் பொறையிலார்-எயினர்-வேடர்-ஆக-௧௪. ௬௯

முல்லையர்பொதுவரண்டர் முந்துகோவிந்தரேயான்
வல்லவர்குடவர்பாதர் மதித்தகோவலர்கோபாலர்
சொல்லிபவமுதராயர் தொருவரேயிடையரென்ப
முல்லையின்மாக்கள்பேர்தா முந்நான்குமொன்றுமாமே

முல்லைநிலமமாக்கள்பெயர்-முல்லையர்-பொதுமர்-அண்டர்-கோவிந்தர்-ஆன்வல்லவர்-குடவர்-பாலர்-கோவலர்-கோபாலர்-அமுதர்-ஆயர்-தொருவர்-இடையர்-ஆக-௧௩, ௭௰

தொறுவியேபொதுவியாய்ச்சி சூழ்ந்திடுங்குடத்திமற்றை
நிறைபுணரிடைச்சிமுல்லை நிலத்திற்பெண்ணாமைந்தாங்
குறைவறுகானநாடன் குறும்பொறைநாடனோடு
முறைசெயுமண்ணறோன்றன் முல்லையிற்றலைவநாமம்

முல்லைநிலப்பெண்பெயர்-தொறுவி-பொதுவி-ஆயச்சு-குடத்தி- இடைச்சி-ஆக-௫-முல்லைநிலத்தலைவன்பெயர்-கான்- நாடன்குறும்பொறைநாடன்-அண்ணல்-தோன்றல்-ஆக-௪ ௭௧

களமரேதொழுவர்மள்ளர் கம்பளருழவரோடு
விளைஞரேகடைஞரேழ்பேர் விளைவுறுமருதமாக்க
ளளவறுகடைச்சிமற்றை யாற்றுக்காலாட்டிபெண்பே
ருளமகிழ்மகிழ்நனூரன் கிழவனுந்தலைவனாமே

மருதநிலமாக்கள்பெயர்-களமர்-தொழுவர்-மள்ளர்-கம்பளர்- உழவர்-விளைஞர்-கடைஞர்-ஆக-௭- மருதநிலப்பெண்பெயர்- கடைச்சி- ஆற்றுக்காலாட்டி-ஆக-௨-மருதநிலத்தலைவன்பெயர்-மகிழ்நன்- ஊரன்கிழவன்-ஆக-௩, ௭௨

பத்தவர்நுளையரோடு பகுறியர்திமிலர்சாலர்
கருதியகடலர்கோலக் கழியரேநெய்தன்மாக்கள்
விரவியபரத்திமேவு நுளைச்சியேயளத்திநீண்டு
பெருகியகடற்புணாவே நெய்தலிற்பெண்ணினாமம்

நெய்தனிலமாக்கள்பெயர்-பாதர்-நுளையர்-பகுறியர்-திமிலர்- சாலர் கடலர்-கழியர்-ஆக-எ-நெய்தனிலப்பெண்பெயர்-பரத்தி-நுளைச்சி- அளத்திகடற்பிணா-ஆக-௪, ௭௩

கொண்கனேதுறைவனோடு குறித்தமெல்லன்புலப்பன்
றண்கடற்சேர்ப்பனெய்தற் றலைவனைச்சாற்றுநாமம்
பண்படுமளவர்தாமே பகர்ந்திடுமாநிலத்தி
லுண்படுமுப்பமைப்போ ருமணரும்விதித்தபேரே

நெய்தநிலத்தலைவன்பெயர்- கொண்கன்- துறைவன்- மெல்லன்-புலன்- பன் கடற்சேர்ப்பான்-ஆக-௫ உம்பளமைப்போர்பெயர்- அளவர் உமணர்-ஆக-௫. ௭௪

அணியினிற்பண்பினுற்ற உவமையின் மகடூஉவாடுவத்
தணிவின்முன்னிலைப்போபேறு சாற்றியதோற்றமாக
வுணறுமைந்திணைம்பாற்பட்ட கருப்பொருளுரைத்தாமிப்பார்
கணிதமின்முறைப்பேர்காட்டிக் காயத்தின்பேருஞ்சொல்வாம்

அணியும்பண்பும்-உவமையும்-அடுத்துவந்த-ஆடு- உமர்டூஉப்பெயர்-களுமமுன்னிலைப்பெயர்களும்- ஐந்திணை- கருப்பொருட்பெயர் களுஞ்சொன்னோம்- இனிமுறைப்பெயர்களுஞ்-காயத்தின்பெயர் களுஞ்சொல்வாம். ௭௫

தாதைதன்றாதையேமூ தாதையேபாட்டனுமம்
பேதையொன்றில்லாமற்றும் பிதாமகனென்றுமாகுந்
தாதையேயம்பனையன றந்தையேயம்மானத்த
னேதமென்பிதாவென்றேழு மீன்றவனாமமாமே

பாட்டன்பெயர்-தாதைதன்றாதை-மூதாதை- பிதாமகன்-ஆக-ங-ஈன்றவன்பெயர்-தாதை-அப்பன்-ஐயன்-தந்தை-அம்மான்-அத்தன் பிதா-ஆக-எ. எசு

அவ்வையம்மனைபயந்தா ளம்மையேயனையேயன்னை
யெவ்வமிலாயிதோய்த யீன்றவளுமமொன்பான்
செவ்விதின்வளர்த்ததாதி செவிலிகோடாய்கைத்தாயாந்
தவ்வைமுன்பிறந்தாள்சேட்டை தங்கையேபின்னைதானே

ஈன்றவள்பெயர்-அவ்வை-அம்மனை-பயந்தாள்- அம்மை-ஆய்- அன்னை-ஆயி-யோய்-தாய்-ஆக-கூ-வளர்த்ததாதியின் பெயர்செவிலிகோடாய்-கைத்தாய்-ஆக-ங-சேட்டையின்பெயர்-தவ்வை- முன்பிறந்தாள்-ஆக-உ-தங்கையின்பெயர்-பின்னை-க. எஎ

ஞாதியர்தாயத்தாரே நாட்டுக்தங்குடியிற்சுற்ற
மாதுலனம்மான்மாம சலகனோர்குடியிற்கொண்டோன்
மூதுணர்சேட்டன்றமமுன் முன்னவனண்ணன்மூத்தோன்
பேதமில்விளவல்பின்னை யநுசனேகனிட்டன்பின்னோன்

ஞாதியின்பெயர்-தாயத்தார்-தங்குடிச்சுற்றம்-ஆக-உ-மாமன்பெயர்-மாதுலன்-அம்மான்-ஆக-உ-ஓர்குடியிற்கொண்டோன் பெயர் சகலன்-க-மூத்தோன்பெயர்-சேட்டன்-தம்முன்-முன்னவன்- அண்ணன் ஆக-ச-பின்னோன்பெயர்-இளவல்-பின்னை-அநுசன்-கனிட்டன்-ச.

கணவனேகொழுநன்வேட்டோன் கண்டவன்வல்லவனேபத்தாத்
துணைவனேதலைவன்கொண்கன் சூழ்ந்திடுக்தவனேகாந்தன்
மணமகனுரியோனன்பன் மணவாளன்பதியேகேள்வ
னனையுங்காதலன்பேர்பன்னே முன்றிநாயகனுமாமே

காதலன்பெயர்-கணவன்-கொழுநன்-வேட்டோன்-கண்டல்- வல்லவன்-பத்தா-துணைவன்-தலைவன்-கொண்கன்-தவன்-காந்தன்-மணமகன்-உரியோன்-அன்பன்-மணவாளன்-மதி-கேள்வன்நாயகன் யஅ

இல்லவளுரிமைபத்தி குடும்புனியில்லேரில்லாள்
வல்லவிகளமேதார மனையாட்டிமனவிருத்தஞ்
சொல்லியபாரிவாழ்க்கைத் துணைகளத்திரமேகாந்தை
நல்லகாதலிவிரும்பு நாயகிதேவிநாமம்

தேவிபெயர்-இல்லாள்-உரிமை-பத்தினி-குடும்பினி-இல்-இல்லாள்-வல்லவி-களம்-தாரம்-மனையாட்டி-மனை- விழுந்தம்பாரி- வாழ்க்கைத்துணை-களத்திரம்-காந்தை-காதலி-நாயகி-ஆக ௰௮ ௮௰

சந்ததிமதலைசூதுத் தநயன்காதலனேமெய்யே
நந்தனன்சிறுவன்தோன்றல் குட்டனேநாட்டுஞ்செம்பொன்
முந்தியமருமான்பிள்ளை மூலசுதன்புதல்வனபுத்திரன்
மைந்தன்கால்பொருள்சேயெச்சம் வழிபிறங்கடைமகன்பேர்

மகன்பெயர்-சந்ததிமதலை-சூது-தநயன்- காதலன்-மெய்யன், நந்தனன்-சிறுவன்-தோன்றல்-குட்டன்-செம்மல்-மருமாப்பிள்ளை- மூலசுதன்-புதல்வன்-புத்திரன்-மைந்தன்-கால்-பொருள்-சேய்-எச்சம்- வழி-புறங்கடை-ஆக-௨௪, ௮௧

சிறுவிபுத்திரியினோடு சிறந்திடுந்தனையையையை
மருவிலபந்தனைமதிப்பா மகள்சுதைபுதல்வியேழ்பே
ரிறையாகுமெச்சந்தானிவ் விருபாற்குமேற்குமென்ப
குருமக்கண்மகார்கிளரைக் கூறுபவிவர்தம்பன்மை

புதல்விபெயர்-சிறுவி-புத்திரி-தனயைஐயை-பந்தனை-மகள்-சுதை ஆக-எ-எச்சமென்னும்பெயர்- மகன்- புதல்வியென்னு மிவ்விருபாற்குமேற்கும் - பிள்ளைப்பன்மையின்பெயர் - குருமக்கள்பெயர்- மகார் சிரார்-ஆக-௰௨. ௮௨

தானையேபதாதிவெய்ய வந்திரன்தளமேதண்ட
வானியேககனம்யூகம் வாகினியநீகம்பாடி
சேனையேகவனங்கூடிச் செறிபலம்பரிகலந்தா
னானையில்படைமூவைந்தா முறுபதாகினியுமப்பேர்

படையின்பெயர்-தானை-பதாதி-தந்திரம்- தளம்-தண்டம்-வானி-கநகம்-யூகம்-வாகினி-அநீகம்-பாடி-சேனை-கவநம்-பலம்-பரிகலம்- பதாகினி-ஆக-௰௬. ௮௩

அணியுண்டையொட்டேயூக மாயவைபடைவகுப்பா
மணிநெற்றிகையேதூசி யடுபடை-யுறுப்பின்பேரா
மணிபின்னிக்கூழையாந்தார் கொடிப்படையாகுமென்ப
பணியக்கிழருதலோடோ யறைபோதல்படையறற்பேர்

படைவகுப்பின்பெயர்- அணி-உண்டை-ஒட்டு-யூகம்- ஆக-௪-படையுறுப்பின்பெயர்-அணி-நெற்றி-கை-தூசி-ஆக-௪- பின்னணியின்பெயர்-கூழை-க-கொடிப்படையின்பெயர்-தார்- க-படையற்றபெயர் கிழறுதல்-அறைபோதல்-ஆக ௨ ௮௪

மக்களேநரரேமக்கண் மானவர்மாந்தர்மண்ணோர்
தக்கமாண்மயரேமைந்தர் சாற்றியமநுடரின்பண்

தொக்கமானிடரீரைந்துஞ் சொல்லியமனிதர்பேரா
மக்கடம்பறம்பிற்குப்பேர் மன்பதைபைஞ்சீலென்ப

மனிதர்பெயர்-மக்கள்-நரர்-மாக்கள் மாநவ -மாந்தர்-மண்ணோர்-ஆ ண்மையா-மைந்தர்-மநுடர்-மானிடர்-ஆக-௰-மக்கட்பரப்பிற்குப் பெ யர்-மன்பதை-பைஞ்சில்-ஆக-௨ ௮௫

உடலுறுப்பங்கம்யாக்கை யுயிர்நிலைதேகங்காயஞ்
சடலமேமூர்த்தமெய்யே தாவரந்தனுவாதாரங்
கடமொடுபுதைபுணர்ப்புக் காத்திரம்பூட்சியாகம
புடைகொள்பூதிகஞ்சரீரம் புற்கலமுடம்பின்பேரே

உடம்பின்பெயர்-உடல்-உறுப்பு-அங்கம்யாக்கை-உயிர்நிலை-தேகம் காயம்- சடலம்-மூர்த்தம்- மெய்-தாவரம்-தநு- ஆதாரம்-கடம்- புதை புணர்ப்பு-காத்திரம்-பூட்சி-ஆகம்-பூதிகம்-சரீரம்-புற்களம்-ஆக-௨௨

வடிதமோடுருவமேனி சட்டகம்வடிவின்பேராங்
கடியுநீள்பிரேதம்வேறு காட்டியசவமபிணப்பே
ரடையுமற்றப்பேர்தானே களேபரமழனமென்று
முடலினிற்குறைகவந்த மட்டையூபமுமுரைக்கும்

வடிவின்பெபர்-வடிவம்- உருவம்-மேனிசட்டம்- ஆக-௪-பிணத்தி ன்பெயர்-பிரேதம் சவம்-களேபரம்- அழனம்- ஆக-௪-உடற்குறையி ன்பெயர்-கவந்தம்-மட்டையூபம்-ஆக-௩ ௮௭

சரணமேபதமேமற்றைத் தாளோடங்கிரியேபாதங்
கருதியசலனமற்றைக் கழலுடனடியுங்காலாம்
பாடென்பகரட்டிறுமம் பற்றியகணைக்கால்சங்கந்
தருமுழந்தான்முழந்து சாநுவும்தன்பேர்தானே

காலின்பெயர்சரணம்- பதம்-தாள்- அங்கிரி-பாதம்- சலனம்-கழல் அடி-ஆக-அ-கரட்டின்பெயர்- பரடு-க-கணைக்காலின்பெயர்-சங்கம்- க முழந்தாளின்பெயர்-முழந்து-சாநு-ஆக-௨ ௮௮

தொடையவூருக்குறங்கு நீள்வாமங்கவான்றோடைம்பேர்
கடிதடநிதம்பமெனப கவின்றிகழல்குலின்பேர்
நடுநுசுப்பொடுமருங்கு நாட்டுமத்தியமேயுக்க
மிடையின்பேர்மருங்கின்பக்க மொக்கலைமென்பதாமே

தொடையின்பெயர்-ஊரு-குறங்கு- வாமம்-கவான்-ஆக-௫-அல்கு லின்பெயர்-கடிதடம்-நிதம்பம்- ஆக-௨-இடையின்பெயர்-நடுநுசுப்பு மருங்குமத்திமம்உக்கம்-ஆக-௫-மருங்கின்பக்கத்தின்பெயர்-ஒக்கலை-க

உதரமோடகடுகுக்கி யுடன்பண்டிவயிற்றின்பேராம்
திதலையேபொறிபேதுத்தி தேமலாஞ்சுணங்குமாமே
யிதலையேயுந்திநாபி யிலஞ்சியேபோகில்கொப்பூழ்
புதியவாண்குறியேகோசம பூப்பகம்பெண்ணினசின்னம்

வயிற்றின்பெயர்-உதரம்-மேடு-அகடு-குக்கி-பண்டி-ஆக ௫ தேமலி ன்பெயர்- திதலை-பொறிதுத்தி- சுணங்கு-ஆக-௪- கொப்பூழின்பெயர் இதலை-உந்திநாபி- இலஞ்சிபோகில்-ஆக-௫-ஆண்குறியின்பெயர் கோ சம்-௧-0 பெண்ணின்சின்னத்தின்பெயர்-பகம்-௧ ௩௰

அகலமேமருமநெஞ்சே யாவமேயுரமேமார்பா
நகிலமேகொம்மைகொங்கை நறுங்குயந்தனங்குருக்கண்
பகர்பயோதரஞ்சுவர்க்கம் பறம்பிவைமுலையின்பல்பேர்
திகழ்முலைக்கண்ணினுமஞ் சிலீமுகஞ்சூசுகங்கள்

மார்பின்பெயர்-அகலம்-மருமம்- நெஞ்சு-ஆகம்-உரம்-ஆக- ௫-முலை யின்பெயர்- நகிலம்- கொம்மை- கொங்கை- குயம்-தனம்குருக்கண்ப யோதரம்-சுவர்க்கம்-பறம்பு-ஆக-௯-முலைக் கண்ணின்பெயர்-சிலீமுக ம்-சூசுகம்-ஆக-௨ ௩௧

கரமத்தம்பாணிதோளே கைத்தலநாற்பேருங்கூப்
பரமுழங்கைகிலுத்தம் பணிந்திடும்மணிக்கட்டென்ப
வுரவியவகங்கை குடங்கையேயுள்ளங்கைப்பேர்
விரல்களங்குலியென்றாகு மிகுமுகிர்நகமதாமே

கைத்தலத்தின் பெயர் கரம் அத்தம் பாணி தோள் ஆக ௪ முழங் கையின்பெயர் கூர்ப்பரம் ௧ மணிக்கட்டின் பெயர் கிலுத்தம் ௧ உள் ளங்கையின்பெயர் அகங்கை அங்கை குடங்கை ஆக ௩ விரலின் பெ யர் அங்குலி ௧ நகத்தின்பெயர் உகிர் ௧ ௩௨

விறன்மிகுபுயமுமொய்ம்பு மேவியவாகுவுந்தோள்
கரையிலகந்தரங்கிரீவங் களங்கண்டங்கழுத்தினமங்
புறம்வெரிநரேம்வெந்நே போற்றியமுதுகுநாற்பேர்
சிறுபுறங்கயிலெருத்தஞ் சுவல்பிடரிகலந்தோண்மேல்

தோளின்பெயர் புயம் மொய்ம்பு வாகு ஆக ௩ கழுத்தின்பெயர் க ந்தரம்-கிரீவம்-களம் கண்டம்-ஆக ௪ முதுகின்பெயர் புறம்வெரிநர் அ பரம் வெந் ஆக ௪ பிடரின்பெயர் சிறுபுறம் கயில் எருத்தம்சுவல் ஆ க ௪ தோண்மேலின்பெயர் இகலம் ௧ ௩௩

வதநமாநநனேகிண்டம் வத்திரமுகமென்றாகு
மிதழுதடதரமேபாலிகைமூத்தமென்றும்பேர்மே

---

0 பெண்ணின்சின்னம்-பெண்குறி

லுதடதேயோட்டமாக்கி ழுதட்டின்பேரதாமென்றும்
விதமுறுமெயிறுதந்த மேவியதசனம்பல்லே

முகத்தின்பெயர்-வதனம்-ஆநநம்-துண்டம-வத்திரம்-ஆக-௪ உத ட்டின்பெயர்-இதழ்-அதரம்-பாலிகை-முத்தம ஆக-௪-மேலுதட்டின் பெயர்-ஒட்டம்-௧-கீழுதட்டின்-பெயர்-அதரம்-௧-பல்லின்பெயர் எயி று-தந்தம-தசனம்-ஆக-௩ ௬௪

பன்னியமுறுவன்மூறல் பல்லுமாநகையுமாகு
முன்னியதாடிகட்டஞ் சுவுகமோவாயின்பேரா
மன்னுநாச்சிகுவைதாரை மற்றத்தாலுவுநாக்காகுங்
கன்னமேயள்ளுக்கேள்வி காதின்பேர்செவியுமாமே

பல்லுக்கும்- நகைக்கும்-பொதுப்பெயர்- முறுவல்-மூரல்- ஆக-௨ மோவாயின்பெயர்-தாடி-கட்டம-கவுகம்- ஆக-௩-நாக்கின்பெயர் நாசி குவைதாரை-தாலு- ஆக-௪-காதின்பெயர்கன்னம்- அள்கேள்விசெவி ஆக-௪ ௬௫

அணன்மிடறுகுமற்றை யண்ணமேயுண்ணாக்கின்பே
ரணலியேயணலேயண்ண மானமேவாய்ப்புறப்பேர்
குணமுறுகவுள்கைபோலங் கொடிறனுகதுப்பின்கூத்தாங்
துணைசெயாக்கிராணங்கோணந் துண்டமேநாசிமூக்காம்

மிறட்டின்பெயர்-அணல்-௧-உண்ணாக்கின்பெயர்-அண்ணம்-௧ மே ல்வாய்புரத்தின்பெயர், அணரி-அண்ணல்-ஆக-௨- கதுப்பின்பெயர் கடவுள்-கபோலம்-கொடிறு அநு-ஆக-௪-மூக்கின்பெயர்-ஆக்கிராண ம கோணம-துண்டம்நாசி-ஆக-௪ ௬௬

நயனநேத்திரமேயக்க நாட்டங்கோநோக்கஞ்செக்கு
வியனுறும்பார்வைதாரை விலோசனம்விழியேயக்கி
செயமுறுதிக்குதிட்டி திருட்டியம்பகமேகண்ணா
மயமுறுதாரைக்கண்ணின் மணிவிளிப்பிமையிறுமம்

கண்ணின்பெயர்-நேத்திரம்- அக்கம்-நாட்டம்-கோ-நோக்கம் செக் குபார்வை-தாரை-விலோசனம்-விழி- அக்கி-திருக்கு-திட்டி- திருட் டி அம்பகம் ஆக-௰௬ கண்மணியின்பெயர்- தாரை- கண்ணிமை- ஆ க-௨- கண்ணிமையின்பெயர்-விளிம்பு-௧ ௭௬

பிருகுடிநுதலேநீண்ட பீருவேபுரூரம்பூருப்
புருவமாம்புகுடின்பேர் புடைபடுபனிச்சைகுறை
திருநுதல்குலமிலாடஞ் சேர்ந்தமத்தகமேநெற்றி
மருவியபாலமுண்ட மளிகமும்வகுக்கலாமே

புருவத்தின்பெயர்-பிருகுடி- நுதல்-பீரு-புரூரம்-பூரு-புகுடி-ஆ-௫ நெற்றியின்பெயர்-பனிச்சை-குறை-நுதல்- குளம்-இலாடம்-மத்தகம் பாலம்முண்டம-அளிகம்-ஆக-௬ ௬௮

உரவியதலையேமூர்த்த முவ்வியோடுத்தமாங்கஞ்
சிரமுடிசென்னிமுண்ட ஞ்சிகரமத்தகமுமாகுந்
திருமுடிசிமிலிசிக்கஞ் சிகையிவைகுடிமிநாற்பேர்
விரவியசுடிகைசூளி மேவியநவிரமுச்சி

தலையின்பெயர்- மூர்த்தம்-உவ்வி-உத்தமாங்கம்-சிரம்- முடி-சென்னி-முண்டம்-சிகரம்-மத்தகம்- ஆக-௯-குடுமியின்பெயர்-முடி சுமிலி-சிக்கம்-சிகை-ஆக-௪-உச்சியின்பெயர்சுடிகை-சூளி-நவிரம்-ஆக-௩ ௯௯

உளைநவிர்க்குடுமிபுத்தை யோரியேகுழல்கார்க்குஞ்சி
தளைசிகைதொங்கல்பங்கி தானீராறாண்மையிர்ப்பேர்
வளர்குழல்கதும்புக்கேச பருவியசுரியனென்கு
மிளையமைந்தர்க்குமற்றை யிளங்கொடியர்க்குமேற்கும்

ஆண்மயிரின்பெயர்- உளை-நவிர்-குடுமி-பித்தை-ஓரிகுழல்-கார்- குஞ்சி-தளை-சிகை- தொங்கல்-பங்கி ஆக-௰௨-இளையமைந்தர்- மயிர்க்குமிளங்கொடியார்மயிர்க்கு மேற்கும்-பொதுப்பெயர்-குழல்-கதுப்புகேசம சுரியல்-ஆக-௪ ௱

குருள்குழல்விலோதமோதி கூழைகுந்தளமாராட்டங்
குரலைம்பாலளகமபத்தும் பெண்மயிர்கூந்தலும்பேர்
பெருகியகொப்புமச்சி பின்னங்கொண்டைபந்தந்
திருமிகுதம்மிலம்பொற் சிகழிகைமயிர்முடிப்பேர்

பெண்மயிரின்பெயர்-குருள்-குழல் விலோதம்-ஓதி-கூழை-குந்தளம்-மாராட்டம்-குரல்-ஐம்பால்-அளகம்-கூந்தல்-ஆக-௰௧-மயிர்முடியின்பெயர்-கொப்புமுச்சி-பின்னகம்-கொண்டைபந்தம்-தம்மிலம்- சிகழிகை-ஆக-௪ ௱௧

ஓரியேகேசம்பங்கி யுளையுரோமம்மராட்ட
நேருமிப்பேர்களாறும் பிறமயிர்நிகழ்த்துமென்ப
சேருமவ்வுரோமமற்றைச் சிரோந்தமுஞ்செறிமயிர்ப்பேர்
வாருங்குந்தளம்விலோத மயிர்குழற்சிப்பேர்வைக்கும்

பிரமயிரின்பெயர்- ஓரிகேசம்-பங்கி-உளை-உரோமம்- மராட்டகம்- ஆக ௬ செறிமயிரின்பெயர்-உரோமம் சிரோந்தம்-ஆக-௨-மயிற்குழற்சியின்பெயர்-குந்தளம்-விலோதம்-ஆக-௨ ௱௨

குடிலமேவேணிநீண்ட கோடீரம்பின்னலோடு
சடிலமென்றைந்துபேருஞ் சடையெனவடைவேசாற்று
நெடியகாத்திரமுறுப்பு ளங்கமவயவப்பேர்
கடியமுட்டுங்கொளுத்துங் கந்துஞ்சந்தாகுமென்றே

சடையின்பெயர் குடிலம்-வேணி-கோடீரம்-பின்னல்-ஆக-௫-அப
த்தின்பெயர்-காத்திரம்-உறுப்பு-அங்கம்-ஆக-௩-சந்தின்பெயர்-முட்டு
கொளுத்து-கந்து-ஆக-௩ ௱௩

சிரைபேசங்கநநாடி இருத்திபரம்புமுப்பே
ராலேயகழலைகோழை யையொடுகோசமாகு
மருவுமங்கிதமேசேக்கை வசிவடுவுடற்றழும்பாந்
தருபொறிவரையிறைப்பேர் சரைநரைபலிதமுப்பேர்

நரம்பின்பெயர்-சிரை-சங்கநம்-நாடி-ஆக-௩-கழலையின்பெயர்-அர
லை-௧-கோழையின்பெயர்-ஐசாறிசம்-௧-உடற்றழும்பின்பெயர் இங்கிதம்
சேக்கை-வசி-வடு-ஆக-௪-இறையின்பெயர்-பொறி-வரை-ஆக-௨-நரை
யின்பெயர்-சரை-பலிதம்-ஆக-௨ ௱௪

அழிதலையோட்டிநாமங் கபாலமேயத்தியென்பு
கழிவுறுமெலும்புநாமங் களேபரமென்றுங்காட்டுங்
கழிவுடன்முழுவெலும்புகங்காளமென்பர்நூலோர்
விழைபொறிகரணங்கந்த மேவுருந்திரியமுப்பேர்

தலையோட்டின்பெயர்-கபாலம்-௧-எலும்பின்பெயர்-அத்தி-என்பு
பரம்-ஆக-௩-கழிவுடலின் முழுவெலும்பின்பெயர்-கங்காளம்-௧-
இந்திரியத்தின்பெயர்-பொறி-கரணம்-கந்தம்-ஆக-௩ ௱௫

தருசுவையொளியூறோசை சாற்றியநாற்றமோருங்
கருவிநாக்கண்மெய்யே காதொடுமூக்குமாகுந்
தெரிதருமுயிரேயாதன் சேதநன்பசுவேசீவ
னரியபற்கலனேகூற்ற னணுவியமானனான்மா

சுவை-ஒளி-ஊறு-ஓசை-நாற்றம்-இவற்றை முறையேயோருங்கருவி
யாவன-நாக்கண்மெய்-காது-மூக்கு-உயிரின்பெயர்-ஆதன்-சேதநன்பசு-
சீவன்-புற்கலன்-கூத்தன்-அணு-இயமானன்-ஆன்மா-ஆக-௯ ௱௬

காப்புச்செய்யுளொன்று.

இருபதோண்டிருபான்முப்பா னிருபானீரைத்துமேலு
மருவியவேழுசெய்யுண் மக்கட்பெயர்க்குச்செய்தான்
குருநறுங்குன்றைவேந்தன் குணபத்திரன்றங்கநோன்மை
தருநெறிநோக்கும்வீரை தழைத்தமண்டலவன்றனே

இரண்டாவது மக்கட்பெயர்த்தொகுதி

முற்றிற்று.

ஆக-தொகுதி-௨-க்கு-விருத்தம்-௨௦௮.

---





மூன்றாவது

# விலங்கின்பெயர்த் தொகுதி.

பெயர்-பிரிவு.

காப்பு.

துலக்குமுக்குடைநிழற்றத் துந்துபிமுழங்கத்தேவர்
நலம்பெறுகவரிவீச நன்மலர்மாரிதூவ
வலங்குளைபரியணைக்கீழ்மலர்ந்தநான்முகனைப்போற்றி
விலங்கின்பேர்தொகுதிதன்னை மேதினிவியப்பச்சொல்வாம்

இதன்பதப்பொருள்.

துலக்கும்-விளங்காநின்ற-முக்குடை - மூன்று குடைகளும் - நிழற்றநிழலைசெய்யவும் - துந்துபி - துந்துபியானது - முழங்க - ஒலிக்கவும் தேவர்-தேவர்கள்-நலம்பெறு-நன்மைபெற்ற-கவரி-சாமரத்தை-வீச-வீசவும்-நன்-மலர்-மாரி-நல்லபுஷ்பமழையை-தூவ-சொரியவும்-அலங்கு - பிரகாசிக்கின்ற - உளை-பிடரிமயிரையுடைய - அரி-சிங்கத்தலையிலே தாங்கப்படுகின்ற அணைக்கீழ்-ஆசனத்தின்கண்ணே-அமர்ந்த - வீற்றிருந்தநான்முகனை - அருகக்கடவுளை-போற்றி-துதித்து-விலங்கின்பெயர்த்தொகுதி - தன்னை விலங்கின் பெயர்த்தொகுதியை-மேதினி-பூமியிலுள்ளோர் - வியப்ப - அதிசயிக்கும்படியாக-சொல்வாம்-யாம்-கூறுவாம்-எ-று க

அரிவயப்போத்துச்சீய மறுகுகேசரியேபூட்கை
மருவியமிருகராசன் வயமா்வேடங்களோடு
பரவுகண்டீரவம்பஞ் சாநநசிங்கப்பல்பேர்
பெருகியயானையாளிப் பேர்யாளியறுகுபூட்கை

சிங்கத்தின்பெயர்-அரி-வயப்போத்து-சீயம்--அறுகு-கேசரிபூட்கை மிருகராசன்-வயமா-மடங்கல்-கண்டீரவம்-பஞ்சாநநம்- ஆக-௰க-யானையாளியின்பெயர்-யாளி-அறுகு-பூட்கை-ஆக-ந உ

வல்லியம்வயமாவோடு சித்திரகாயமற்றும்
வெல்லுமாவுழுவைபாய்மா வியாக்கிரந்தாக்குவேங்கை
கொல்லவேயெழுந்துசீறுங் குயவரிகொடுஞ்சாத்தூலம்
ரில்லொடுபுண்டரீகங் கொடுவரிபுலியினமம்

புலியின்பெயர்-வல்லியம்-வயமா-சித்திரகாயம்-வெவ்லுமா-உழுவை பாய்மா-வியாக்கிரம்-தாக்கு-வேங்கை-குயவரிசார்த்தூலம்-புல்-புண்டரீகம்-கொடுவரி-ஆக-௰ச ௩

தும்பிமாதங்கந்தூங்க றேல்கறையடியெறும்பி
யும்பல்வாரணம்புழக்கை யொருத்தல்வல்விலங்குநாகங்
கும்பிநால்வாயேபூட்கை குஞ்சரங்கரிணியத்தி
கம்பவேழம்முவாவே கரிகயங்களிறுகைம்மா

யானையின்பெயர் - தும்பி - மாதங்கம்-தூங்கல்-தோல்-கறையடி-எறும்பு-உம்பல்-வாரணம் - புழகை - ஒருத்தல்-வல்விலங்கு- நாகம்-கும்பி நால்வாய்-பூட்கை-குஞ்சரம்-கரிணி-அத்தி-வேழம்-உவா--கரி-கயம்--களிறு-கைம்மா- ஆக-உ௪ ௪

சிந்துரம்வயமாவேகஞ் செறிபிம்புகர்முழங்க
டந்தியேமதாவளந்தந் தாவளம்வழுவையாம்பன்
மந்தமாருண்மாமற்றை மதகயம்போதகத்தோ
டேந்துமேழைந்துமேலு மிரண்டுமேற்றுடர்ந்தயானை

சிந்துரம்-வயமா- இபம்-புகர்முகம்-தந்தி- மதாவளம்-கந்தாவளம்-வழுவை-ஆம்பல்-மந்தமா-மருண்ம-மதகயம்-போதகம்- ௰௩ - ஆக-௩எ ௫

உதவிசெய்தினத்தைக்காக்கு முர்பலேயூகநாதன்
மதகயவகோற்கடம்பின் வாலின்போதாலவிட்ட
மதணுனிவேசகந்தா ளுமுதுகின்பேர்மஞ்சா
மதகமுங்கும்பந்தானு மத்தகனென்றுகூறும்

இனத்தைக்காக்கு மும்பின்பெயர்-யூகநாதன்-க-மதகயத்தின்பெயர் மகோற்கடம் - க வாலின்பெயர் - தாலவட்டம் - க வாலுனியின்பெயர்- வேசகம்-க-முதுகின்பெயர் - மஞ்சு-க-மத்தகத்தின்பெயர் மத்தகம்-குப்பம்-உ ௬

கரடமேமதம்பாய்கின்ற சுவடுகெந்துதிகளேபுட்
கரமதர்மதத்தினமங் கடங்கடாந்தானமாகும்
பெருகியபிருதுமானம் பேசுகொம்பின்னடிப்போ
கருதுகோடெயிறுந்தந்தநிரியாணககடைக்கணுமே

மதம்பாய்சுவட்டின்பெயர் - காடம் - க-கைந்து நுதியின்பெயர்-புட்கரம்-க-மதத்தின்பெயர்-கடம்-கடாம் - தானம்-ஆக-௩-கொம்பினடிப்பெயர்-பிருதுமானம்-க-தந்தத்தின்பெயர்--கோடு-எயிறு-ஆக-உ--கடைக்கண்ணின்பெயர்-நிரியாணம்-ஆக-க எ

கண்டிதேஞ்செவியடிப்பேர் குளிகைகவுள்கதுப்பாம்
விண்டகையுமிழுநீரே விலாழிபல்லடிகரீரங்
கொண்டகாத்திரமேமுன்கால் கூறியவபரம்பின்கா
லுண்டைதொண்டலந்துதிக்கை சேவகந்துயிலிடப்பேர்

செவியடியின்பெயர்-குளிகை-௧-கவுளியின்பெயர் - கதுப்பு-துதிக்கையுமிழ் நீரின்பேர்-விலாழி-௧-பல்லடியிட்பெயர்-சீரம் - ௧ - முணகாலின்பெயர் - காத்திரம்-௧-பின்காலின்பெயர்--அபரம்-௧-துதிக்கையின்பெயர்-தொண்டை-தொண்டலம்-ஆக - ௨-துயினிடத்தின்பெயர்-சேவகம்-ஆக-௧ ௮

வடவையத்தினியிரண்டும் பிடிகளாங்கருணியும்பேர்
சடகம்யானைத்திரட்பேர் கயந்தலைபோதகங்க
டுடியடிகளபமோடு கயமுனியானைக்கன்றாம்
படுகுழிபயம்பாமென்ப பாகலம்யானைநோயே

பிடியின்பெயர்-வடவை-அத்தினி - கரிணி-ஆக-௩-யானைத்திரளின்பெயர் - கடகம் - ௧-யானைக்கன்றின்பெயர்-கயந்தலை-போதகம் - துடியடி-களபம்- கயமுனி-ஆக-௫-யானைப்படுகுழியின்பெயர்-பயம்-௧-யானைநோயின்பெயர்-பாகலம்-ஆக-௧ ௯

பரிதுரகஞ்சிறந்தபாடலங்கிள்ளைபாய்மாத்
துரகதம்வாசியுன்னி தூசிகந்தருவங்கற்கி
யரியயனிவுளிமாவே யசுவம்புரவிகோரங்
குரகதங்கோணங்கொக்குக் கொய்யுளைசடிலங்கோடை

குதிரையின்பெயர் - பரி-துரகம்-பாடலம்-கிள்ளை-பாய்மா-துரகதம் - வாசி-உன்னி-தூசி-கந்தருவம் - கற்கி-அரி-அயம்-இவுளி-மா அஸ்வம் - புரவி - கோரம்-குரகதம்-கோணம்-கொக்கு-கொய்யுளை-சடிலம் கோடை-ஆக-௨௪ ௰

கந்துகங்கனவட்டம்போர் காட்டும்பத்திரிதுரங்கம்
குந்தமத்திரியாரைந்துங் குதிரையினுமமாகும்
வந்தமேசகத்தினோடு சுவல்குசைமயிர்கிளம்பி
வந்தபேர்குறங்குரச்சை மாதிகமதுபோமார்க்கம்

கந்துகம் - கனவட்டம் - பத்திரி-துரங்கம்-குந்தம் - அத்திரி-௬-ஆக ௩௰-குதிரையிரின்பெபர் - குற-குரச்சை - ஆக-௨-குதிரை போமார்க்கத்தின்பெயர் மாதிகம் ஆக-௧ ௰௧

குலவியபகவான்கூலங் கோக்குடன்சுரபியாவே
யிலகியநிறையேதேனும் பெற்றமிவ்வொன்பதாகும்
பயமுறுகபிலைதேனுப் பரவுதெய்வப்பசுப்பேர்
மலடுதான்வற்சையீற்று வற்சலங்கன்றுவற்சம்

பசுவின்பெயர் - ஆன்-கூலம் - கோ-குடம்-சுரபி-ஆ-நிறை-தேனு பெற்றம-ஆக-௯-கடவுட்பசுவின்பெயர்-கபிலை-தேனு-ஆக-௨-மலட்டுப்பசுவின்பெயர் - வற்சை-ஈன்றபசுவின்பெயர்-வற்சலம்-௧-பசுவின்கன்றின்பெயர்-வஞ்சம்-ஆக-௧ ௰௨

பரவுமோரீற்றுக்கிட்டி பத்திரைநற்பசுப்பேர்
சுரைமுலையாகுமுற்றைச் சுதைகுணமிலாப்பசுப்பேர்
திருமுலைமடியினுமனு செருத்தலாவீனமென்ப
நிரைதொறுகாலிகோட்ட நீண்டகாலேயங்கூட்டம்

ஈற்றுப்பசுவின்பெயர் - கிட்டி-௧-நற்பசுவின்பெயர் - பத்திரை-௧-பசுவின்முலைப்பெயர் - சுரை-௧-குணமில்லாப்பசுவின்பெயர்- சுதை-௧-முலைமடியின்பெயர் - செருத்தல்-ஆவீனம்-ஆக-௨-பசுக்கூட்டத்தின்பெயர்- நிரை-தொறு-காலிகோட்டம்-காலேயம்-௫ ௰௩

பாறல்சேப்பெற்றம்பூணி பாண்டில்கொட்டியமிராலே
யேறொடுமூரிபுல்ல மெருத்தின்பேரிமின்மூரிப்பாம்
பாறல்பேரெருத்தினாமம் பகடுந்தூர்வகமுமாகு
மேறுக்கநரையேநந்தி யிடபமங்கூளியும்பேர்

எருத்தின்பெயர்-பாறல்-சே-பெற்றம் பூணி பாண்டில்-கொட்டியம் இரால்-ஏறு-மூரி-புல்லம்-ஆக-௰-எருத்தின்மூரிப்பின்பெயர் - இமில் மபேரெருத்தின்பெயர்-பாறல்-பகடு-தூர்வகம்-ஆக-௩-இடபத்தின்பெயர்-ஏறு-உக்கம்-நரை-நந்தி-கூளி-ஆக-௫ ௰௪

தூர்வகந்தூரியமென்ப பொதியெருதெருமையின்பேர்
காரனேவடவைமேதி சைரிபங்கவரிகார
மூரியேமகிடமெட்டு மொருவுமற்றுன்பொதுப்பேர்
பாரியகடாவினோடு பகடாமைமலட்டினாமம்

பொதிஎருதின்பெயர்- தூர்வகம் - தூரியம் - ஆக-௨-எருமையின் பெயர்-காரான் - வடவை-மேதி-சைரியம்-கவரி-காரா-மூரி - மகிடம்-ஆக-௮-எருமைஆண்பொதுப்பெயர் - கடா-பகடு - ஆக-௨-மலட்டெருமையின்பெயர்-மை-ஆக-௧

அருணஞ்செம்மறிபோமோத்தை யசமுதளுடுவேகொச்சை
துருவைமேழகம்வற்காலி துள்ளலேபள்ளைவெள்ளை
வடமேடங்கடாமை மறிவெறிகொறியேசாகம்
புருவையேதகர்மூவேழு மிரண்டிமாட்டின்பொதுப்பேர்

ஆட்டின்பொதுப்பெயர்-அருணம் - செம்மறி - மோத்தை-அசம்-உதள்-உடு-கொச்சை-துருவை - மேழகம்-வற்காலி-துள்ளல்-பள்ளை-வெள்ளை-வருடை-வேடம்-கடா-மை-மறி - வெறி-கொறி-சாகம்-புருவை-தகர்-௨௩ ௰௫

துறிவகைகொறிமுப்பேருங் கோற்றுஞ்செம்மறியாட்டின்பேர்
செருமலிதகர்கடாவே திண்ணகமேழகங்கள்
பரவுசம்பளமோரைந்தும் பற்றுவவ்வாணின்பல்பேர்
மருவிபகுட்டன்சோரன் மறிபறழ்குட்டியாமே

செம்மறியாட்டின்பெயர் துருவை-மை-கொறி- ஆக-௩-செம்மறியா ட்டாணின்பெயர்-தகர்-கடா-திண்ணகம்-மேழகம் - கம்பளம்-ஆக-டு ஆட்டுக்குட்டியின்பெயர்-குட்டன்-சோரன்-மறி-பறழ்-ஆக-௪- ௰எ

வெள்ளைவற்காலிகொச்சை வெள்ளாட்டிநாமமாகும்
வெள்ளையேயதன்மறிப்பேர் மேவியகெச்சைசாகந்
தள்ளியமோத்தைமுப்பேர் சாற்றுமேயிவற்றினுள்பேர்
வள்ளியசரபத்தோடு வருடையும்வரையாடாமே

வெள்ளாட்டின்பெயர்-வெள்ளை-வற்காலி - கொச்சை ஆக-௩-வெள் ளாட்டுக்குட்டியின் பெயர் - வெள்ளை - க - வெள்ளாட்டாணிபெயர்- கெச்சைசாகம் - மோத்தை - ஆக-௩-வரையாட்டின் பெயர் - சரபம் வருடை-ஆக-உ ௰அ

கேழலேயரிகுரோட்டங் கிரிகிடிகிருட்டியேன
மோழலேயிருளிமூன்று வல்லுளிகளிறுகைம்மா
போழ்முகக்கோட்டுமாவே போத்திரிவராகங்கோலஞ்
சூழுமீரெட்டும்பன்றி சூகரமேறுழியும்பேர்

பன்றியின்பெயர் - கேழல் - அரி - குரோட்டம்-கிரி-கிடி-கிருட்டி- ஏனம்-மோழல்-இருளி-வல்லுளி-களிறு-கைம்மா - கோட்டுமா-போ த்திரிவாகம்-கோலம்-சூகரம்-எறுழி-ஆக-௰அ ௰௯

சல்லியமுழவுமாமே மெய்யொடுசல்லபங்கள்
சொல்லுமுட்பன்றியின்பேர்சொற்றவிப்பன்றிமுள்ளுஞ்
சல்லமுஞ்சலமுமாகுங் குடாவடிகாடிதானும்
பல்லுகம்பல்லமெண்கோ டுளியமுமேலும்டன்னும்

முட்பன்றியின்பெயர் - சல்லியம் - முழவுமா-எய்-சல்லபம்-ஆக-௫- முட்பன்றி முள்ளின்பெயர் - சல்லம்-சலம்-ஆக-உ - கரடியின்பெயர்- குடாவடி பல்லுகம்-பல்லம்-எண்கு-உளியம்-எலு-ஆக-௬ உ௰

கவரிசீரகாடேவிகஞ் சாமரங்கவரியும்பேர்
கவரிமாபடகம்பட்ட பானமாவெகினுங்காட்டுங்
கவயமாவாமாகாட்டா காத்திரிநகுலமென்னு
விவையிருபேருமின்றித் தீர்வையுங்கீரியாமே.

சாமரத்தின்பெயர் - சவரி - கிகரம்-கவரி-ஆக-௩ - கவரிமாவின்பெ யர் - படகம் - பட்சம்-மான்மா-ஏகின்-ஆக-௪-காட்டாவின்பேர் - கவ யமா-ஆமா-ஆக-உ-கீரியின்பெயர்-காத்திரி-நகுலம்-தீர்வை-ஆக-௩ உக

அரிணஞ்சாரங்கநவ்வி யடலுழைமிணையேகூந
மிருகமேமறிகுறங்க மேவுமர்மேணமும்பேர்

ரிரலைவச்சயமேபுல்வாய் கலைகருமானுமேற்கு
முரலைபுல்வாய்க்கும்பேரா மென்றனர்குன்றுநூலோர்

மானின்பெயர்-அரிணம்-சாரங்கம்-நவ்வி-உழை-பிணை-குரங்கம்-மிருமறி-குரங்கம்-ஏணம்-ஆக-ய-கலையின்பெயர்-இரலை-வச்சயம்-பிங்வாய்-கரு-மான்-ஆக-௪-புல்வாயின்பெயர்-இரலை-௧ ௨௨

கழுதையின்பெயர்வாலேபந் தர்த்தபங்காளவாயே
யழகிலத்திரியேகோகு வேசரிகரமுமாகுங்
குழைவுநவேசரிப்பேர் கோவேறுகழுதைக்கூற்று
மழிவிலொட்டகந்தாசேர மத்திரிநெடுங்கழுத்தல்

கழுதையின்பெயர்-வாலேபம்-கர்த்தபம்-காளவாய்-அத்திரி-கோகு வேசரி-காகம-ஆக-எ-கோவேறுகழுதையின்பெயர்-வேசு-௧-ஒட்டகத்தின்பெயர்-தாசேரம்-அத்திரி-நெடுங்கழுத்தல்-ஆக-௩ ௨௩

ஓரிகோமாயுவூள னுண்ணனேயிகலன்சம்பு
பூரிமாயுக்குரோட்டஞ் சிருகாரினரியேபோற்றி
மோரியேவாலாங்கூல முறைமைம்முகனேகள்வன்
சீரியகலையோடைந்து முசுவெனச்செப்பலாமே

நரியின்பெயர்-ஓரி-கோமாயு-ஊளன்-ஓண்டன்-இலகன்-சம்பு-பூரிமாயு-குரோட்டம்-சிருகாலன்-ஆக-௯-முசுவின்பெயர்-ஓரி-கோலாங்கூலம்-மைம்முகன்-கள்வன்-கலை-ஆக-ரு ௨௪

சூரனேமுடுவல்பாசி புரோகதிசுனகன்குக்கல்
கூரனனேயெகினனக்கன் குரைமுகன்ஞயஞாளி
சாரமேயன்சுணங்கன் சுவானேநாய்தானேமூப்பேர்
வீரியமுடுவல்பெண்ணாய் விருகங்கொக்கிரண்டுஞ்செந்நாய்

நாயின்பெயர்-சூரன்-முடுவல்-பாசி-புரோகதி-சுனகன்-குக்கல்-கூரன்-எகினன்-அக்கன்-குரைமுகன்-ஞமலி-ஞாளி-சாரமேயன்-சுணங்கன் சுவாமி-ஆக-௰௩-பெண்ணாயின்பெயர்-முடுவல்-௧-செந்நாயின் பெயர்-விருகம்-கொக்கு-ஆக-௨ ௨ரு

வெருகுடனலவனோதி விடரும்விலாளம்பூசை
பொருதுமார்ச்சாலப்பாக்க னிற்புலிபூசையொன்பான்
மருமிகுஞருக்கநான மான்மதநரந்தநான்கும்
கருஞகத்தூரியின்பேர் காட்டியமறுவிரலி

பூனையின்பெயர்-வெருகு-அலவன்-ஓதி-விருகன்-விலாலம்-பூசைமார்ச்சாலம்-பாக்கன்-இற்புலி-ஆக-௯-கத்தூரியின்பெயர்-ஞருக்கம் நானம்-மான்மத-நரந்தம்-ஆக-௪-நாவியின்பெயர்-மருவி-௧ ௨௬

வலிமுகங்கடுவன்பாயும் வானரமரிபேமந்தி
பிலவங்கங்கோகிலங்கான் பெயர்ந்ததோடரமேபூகங்
கலமமர்க்கடமேநாகங் கவிகுரங்கிவையீராறுங்
குலவுகாருகமேபூகங் கூறியகருங்குரங்கே

குரங்கின்பெயர்-வலிமுகம்-கடுவன்-வானரம்-அரி-மந்தி-பிலவங்கம்-கோகிலம் - கோடரம்-பூகம்-மர்க்கடம்-நாகம்-கவி - ஆக - ௰௨-கருங்குரங்கின்பெயர்-காருகம்-ஆக-௨ ௨௭

சாயந்தசாயானதங்கள் சாடமேகாமரூபி
யேய்ந்ததண்டோயானொந்தி யிசைகொம்பிமுசலியோந்தி
யோந்திரேசுவவுகண்டனொதுசுந்தரிமூஞ்சூறே
யாய்ந்திடுசிகரியாகோடிரும்பனுமகழெலிப்பேர்

ஓந்தியின்பெயர்-சாய்ந்தம்-சரடம்-காமரூபி-தண்டு - ஓணான்-ஓந்தி-கொம்பி-முசலி-ஒக்தி-ஆக-௯-மூஞ்சூறின்பெயர்-சுலவு-சுண்டன்-சுந்தரி-ஆக-௩-எலியின்பெயர்-சிகரி-ஆகு-இரும்பன்-ஆக-௩ ௨௮

கருப்பைகாரெலியினுமங் களந்துளமேயாகுப்
பெருச்சாளிமூடிகத்தோடுந் துருவென்றும்பேராம்
வரிப்புறம்வெளிலணிற்பேர் வருந்தடிமுசலிகோதா
தரிற்றெழுமுடும்பினுமஞ் சமுபவென்னலாமே

காரெலியின்பெயர்-கருப்பை-க-பெருச்சாளியின்பெயர்-களதம்-துந்துளம்-ஆகு-மூடிகம்-உந்துரு-ஆக-௫-அணிலின்பெயர்-வரிப்புறம்-வெளில்-ஆக-௨-உடும்பின்பெயர்-தடி-முசலி - கோதா-ஆக-௩ - முசலின்பெயர்-சகம் ௨௯

விலங்குணமரபு,

கடுவன்மாவொருத்தல்போத்துக் கலைதகர்களிறுசேவ
லொடுபகலும்பலேறோ போரிலீராறுமாண்பேர்
வடிவுறுகுரங்குபூனை மற்றிவைகடுவனாமே
யடுதிறல்யானைபன்றி யாடல்வெம்புரவிமாவாம்

விலங்காண்பெயர் - கடுவன்-மா-ஒருத்தல்-போத்து-கலை-தகர்-களிறு-சேவல்-பாடு - உம்பல் - ஏறு-ஓரி-ஆப-௰௨-கடுவனென்னும்பெயர்-குரங்கு-பூனை- ஆகியவிரண்டிற்குமாம்-மாவென்னும்பெயர்-யானை பன்றி-புரவி-ஆக-௩ ௩௰

காடிபுல்வாய்மான்பானை கவரியோடெருமைபன்றி
பொருபுலிமரையென்றோன்பான் புகன்றிடுமொருத்தலாகு
மரைப்பசுபுலியேபூனை மற்றைப்புல்வாயம்பேர்த்தாங்
கருதியமுசுவுமானுங் கலைவயனக்காட்டலாமே

ஒருத்தலென்னும்பெயர்-கரடி-புல்வாய்-மான்-யானை-கவரி-எருமை பன்றி-புலி-ஆக-௯-போத்தென்னும்பெயர்-மரை-பசு-புலி-பூனை-புல்வாய்-ஆக-௫-கலையென்னும்பெயர்-பசு-மான்-ஆக ௨ ௩௧

துருவாடுவேழம்யாளி சுருத்தகரென்றேசொல்லும்
கரிபொருசுறவுபன்றி களிறெனக்காட்டலானே
செருமலிகோழியன்னஞ் சேவலென்றோதலாகும்
எருமையோடியானைபெற்றம் பகடிபம்மும்பலாமே

தகரென்னும்பெயர்-துருவாடு-வேழம்-யாளி-சுரு-ஆக-௪-களிறென்னும்பெயர்-கரி-சுறவு-பன்றி-ஆக-௩-சேவலெனும்பெயர்-கோழி-அன்னம்-ஆக-௨-பகடென்னும்பெயர்-எருமை-யானை-பெற்றம்-ஆக-௩-உம்பலென்னும்பெயர்-இமம்-ஆக-௧ ௩௨

ஆனுடனெருமைபன்றி யாய்மயிர்க்கவரிசங்கு
மானொடுமரைபுல்வாயு மாறுகொள் சுறவுமேறு
ஊனுகர்நரியினோடு முசுவிடையோரியாகு
மானநூல்விலங்கினுணிஞ் மரபெனவடைந்தவாறே

ஏறென்னும்பெயர்-ஆன்-எருமை-பன்றி-கவரி-சங்கு-மான்-மரை-புல்வாய்-சுறவு-ஆக-௯-ஓரியென்னும்பெயர்-நரி-முசு-ஆக ௨ ௩௨

## விலங்கின்பெண்மரபு.

பிடிபிணைபெட்டைமந்தி பிணவொடானாகுபாட்டி
கொடுவிலங்கின்பெண்பாற் குஞ்சரங்கவரியோடு
நெடியவொட்டகமும்மூன்று நெடும்பிடியிசைத்துமாம
வடியுளவுழைபுல்வாய்நாய் வராகமேபிணையிசைக்கும்

விலங்கின் பெண்பாற்பெயர் - பிடி - பிணை - பெட்டை - மந்தி - பிணா - ஆன்நாகு - பாட்டி - ஆக - ௮ - பிடியென்னும்பெயர் - குஞ்சரம் - கவரி ஒட்டகம் - ஆக - ௩ - பிணையென்னும்பெயர் - உழை - புல்வாய் - நாய் - வராகம் - ஆக - ௪ ௩௪

ஒட்டகங்கழுதைவாசி யுறுசிங்கமரையிவ்வைந்தும்
பெட்டையாமுசுவோடூகம் பேசியகுரங்குமந்தி
பட்டபுல்வாய்நாய்பன்றி பகர்ந்திடும் பிணாவெனும்பேர்
கட்டியவெருமைபெற்றங் காட்டுமமரையாவும

பெட்டையென்னும்பெயர்-ஒட்டகம்-கழுதை-வாசி - சிங்கம் - மரை ஆக- ௫-மந்தியென்னும்பெயர்-முசு-ஊகம்-குரங்கு-ஆக-௩-பிணாவென்னும்பெயர்-புல்வாய்-நாய்-பன்றி-ஆக-௩- ஆவென்னும்பெயர்- எருமை பெற்றம்-மரை-ஆக-௩- ௩௫

எருமையேமரையேபெற்ற மேற்றநீர்ச்சாதிநாகா
கரிபன்றிநாயின்மூன்று நாட்டியபாட்டியாகும்
பெருகுபெண்பாற்பிணாப்பெண் பேணிமானவையுமாணு
பொருளினாலுணர்ந்துசொன்ன புலவர்கள்வாக்குத்தானே

நாகென்னும்பெயர் - எருமை-மரை-பெற்றம்-ஏற்றநீர்சசாதி-ஆக-௪-பாட்டியென்னும்பெயர்-நரி -பன்றி-நாய்-ஆக - ௩ பிணாப்பெண ணென்னும்பெயர்கள் - பெண்பாலெவற்றிற்குமாம் - ஆணென்னும் பெயர்- ஆண்பாலெவற்றிற்குமாம் ௩௬

விலங்கின்பிள்ளைமரபு.

பறழ்பிள்ளைகுழவிட்டிப் பார்ப்பொடுகுருளைகன்று
மறியேபோதகமிவ்வொன்பான் வல்விலங்கின்பிள்ளைப்பேர்
பறழொடுகுருளைகுட்டி பற்றியமூன்றுபேரு
முறுபுலிமுயல்வராக மோடியநரிநாயாமே

விலங்கின்பிள்ளைப்பெயர் - பறழ் - பிள்ளைக்குழவி-குட்டி-பார்ப்பு குருளை-கன்று-மறி-போதகம்-ஆக ௯-பறழ் குருளை-குட்டியென்னும் (பெயர்கள்,புலி-முயல்-வராகம்-நரி-நாய்-ஆக ௫ ௩௭

முறுகுநாயன்றிமற்றை மொழிந்திடும்பிள்ளையென்ப
மறியென்பதாடமூங்கு மானொடுகுதிரைவைக்கும்
பறழ்பிள்ளைகுழவிகுட்டி பார்பவென்னவைந்துபேரு
குறியுளாகுரக்கேயாதி கோட்டில்வாழ்விலங்கின்பிள்ளை

பிள்ளையின்பெயர்-நாயொழிந்தவயிற்றிற்காம்- மறியென்னும்பெயர் ஆடு - அழுங்கு - மான்-குதிரை-ஆக ௪-பறழ்-பிள்ளை-குழவி -குட்டி யென்னும்பெயர்கள் - குரங்குமுதல் மரக்கோட்டில்- வாழ்விலங்கின்பி ள்ளைகட்காம் ௩௮

கடமையானெருமைபெற்றக் கவயமொட்டகமேயானை
விடுபரிமரைகராமே வேவியகவரிகன்றும்
கடமையானெருமையானை காட்டியகுழவியாகு
மடுபுலிசிங்கம்யானை யானைபோதகமென்றுமே

கன்றென்னும்பெயர்-கடமை - மான் எருமை-பெற்றம்-கவயம்-ஒட்டகம் யானை-பரி-மரை-சாரம்-ஆக ௰௧-குழவியென்னும்பெயர்-கடமை-மான்-எருமை-யானை ௪ - போதகமென்னும்பெயர்-புலி-சிங்கம் யானை-ஆக-௩ ௩௯

முசுகுபகிரிபூனை முயலணிலென்பநான்கும்
பறவொடுகுட்டிபிள்ளை பன்னியமூன்றுமாகும்
மறவொடுகுட்டிதானே பாக்கனுமணிலுமென்ப
பறழ்பிள்ளையிரண்டுஞ்சொலிற் பார்பொடுதவழ்சாதிப்பேர்

பறழ்-குட்டி- பிள்ளையென்னும்பெயர்கள்-கீரி-பூனை-முயல்-அணில் ஆக ௪-பறழ்-குட்டியெனும்பெயர்கள்-பாக்கன்-அணில்-ஆக ௨-பறழ்-பிள்ளையெனும்பெயர்கள்-பார்ப்பு-தவழ்சாதி-ஆக ௨ ௬௰

குருளையுங்கன்றுமானிற் கொள்ளுபகுழவியோடு
குருளையும்யாளிகொள்ளுங் குழவியேமுசவினுக்கும்
குருளையேமுசுவின்கூற்றுங் கூறியமாவேமானை
மிருகமேகுரங்கோன்கும் விலங்கினிற்பொதுப்பேராமே

குருளை-கன்றென்னும்பெயர்கள்-ஆன்-குழவி-குருளையென்னும்பெயர்கள் - யாளி ௧-குழவி குருளையென்னும்பெயர்கள்-முசு ௧-மரபு-முற்றிற்று-விலங்கின்பொதுப்பெயர்-மா-மான்-மிருகம்-குரங்கு-௪

சாலமேவியூகம்யூகஞ் சாற்றியகுலம்விருத்தம்
கோலமாக்கணம்விலங்கின் கூட்டமாம்பிறவுமேற்கும்
கூலம்வேசகமேதோகை குறித்திடுமிலாங்கூலம்வால்
வாலதியென்றுபேராம் வாலின்கீழ்வெருகமாமே

விலங்கின்கூட்டத்தின்பெயர்-சாலம்-வியூகம்-யூகம்-குலம் - விருத்தம் கணம்-ஆக ௬-விலங்கின்வாலின்பெயர் - கூலம்-வேசகம்-தோகை யிலாங்கூலம்-வாலதி-ஆக ரு-விலங்கின்வாற்கீழிடத்தின்பெயர்-வெருகம்-௧ ௬௨

மருப்பொடுசிருங்கங்கோடு மற்றையவுலவைகொம்பாம்
குருத்திடும்விடாணமும்பேர் குமரங்கொம்பிலாவிலங்காம்
கிருத்திமப்புறணிபோர்வை கிளர்தவொளியதொக்குத்
துருத்தியேசருமம்பச்சை துவக்குரிவடகந்தோலாம

விலங்கின்கொம்பின்பெயர் - மருப்பு-சிருங்கம்-கோடு-உலவை-விடாணம்-ஆக ரு-கொம்பிலாவிலங்கின்பெயர் - குமரம்-௧-தோலின்பெயர் கிருத்திமம்-புறணி-போர்வை-அதவவொலியல்-தொக்கு- துருத்தி சருமம்-பச்சை-துவாகு-உரி-வடகம்-ஆக ௰௨ ௬௩

தசைபுலால்புலவுபுண்ணே தடியொடுபுளிந்தநாலே
பிசிதம்வள்ளூரம்விடக்கப் பேசிலூனின்பேர்பத்தாம்
பொசிதருமுடையேஊழ்த்தல் பூதியேதசைபுலாலம்
பசுவினதிரச்சிதானே பகர்ந்தவள்ளூரமதாமே

ஊனின்பெயர்-தசை - புலால்-புலவு-புண்-தடி-புளிதம்-நா-பிசிதம் வள்ளூரம்-விடக்கு-ஆக ௰-புலாலின்பெயர் - முடை-ஊழ்த்தல்-பூதி-தசை ஆக ௪-சுவினிறைச்சியின்பெயர்,வள்ளூரம் ஆக-௧ ௬௪

எருவையேநெய்த்தோர்சோரி யிரம்பிடுமுதிரம்புண்ணீர்
குருதிசெம்பால்புலாநீர் குளித்தசோணிதமேசெந்நீர்

கருதியசுவேன்மற்றைக் கறையிராட்டிரத்தத்தின்பேர்
விரவியநிணங்கொழுப்பு விளரொடுவிழுக்குமாமே

இரத்தத்தின்பெயர்-எருவை - நெய்த்தோர்-சோரி-உதிர-புண்ணீர்
குருதி செம்பால் புலாநீர்-சோணிதம்-செந்நீர்-சுவேன்-கறை- ஆக௰௨
கொழுப்பின்பெயர், நிணம்-விளர்-விழுக்கு-ஆக-௩ ௪௫

கருவொடுசிலேபீள் சூலே சருப்பமேயாவுமாகு
மருவியவழும்பினாமம் வழுக்கென்பவீருளீரல்
கழிதியமுடையினமங் காட்டியபுலவோடுத்தை
புழுவியமலமேயாசே யுபமலமுள்ளின்மாசாம்

சருப்பத்தின்பெயர்-கருசிலே-பீள்-சூல்-வாய்வு ஆக-௫ - வழும்பின்
பெயர் வழுக்கு-க-ஈரலின்பெயர், ஈருள்-க முடையின்பெயர் - புலவு
ஊத்தை ஆக-உ-மாசின்பெயர்-மலம்-க உண்மாசின்பெயர்-உபமலம்

அரவுகட்செவியேபோகி ரகியரிவியாளஞ்சர்ப்ப
முரகம்பன்னகமேநாக முற்றமாசுணமேசக்கிரி
பரவியபுயங்கம்பாந்தள் பணிமுவைந்திவைபாம்பின்பே
ரிவைகொளுந்துண்டஞ்சாரை யிராசிலமென்பதும்பேர்

பாம்பின்பெயர் - அரவு-கட்செவி-போகி-அகி-அரி-வியாளம்-சர்ப்
பம்-உரகம்-பன்னகம்-நாகம்-மாசுணம்-சக்கிரி - புயங்கம்-பாந்தள்-பணி
ஆக-௱௩-சாரைப்பாம்பின்பெயர்-துண்டம்-உராசிலம் ஆக-௨

விடமுமிழ்மண்டலிக்கு மேவுகோளகமேநாமக்
கொடியமாலுதானனேகண் குத்திப்பாம்பென்றுகூறு
நெடியமாசுணமேபாந்த னீள்பெரும்பாம்பினாம
முடியவேயெந்தசிறு மூர்க்கனேநாகமென்ப

மண்டலிப்பாம்பின்பெயர்-கோளகம்-க-கண்குத்திப்பாம்பின்பெயர்
மாலுதானன் க-பெரும்பாம்பின்பெயர் - மாசுணம் - பாந்தள் ஆக-உ
நாகத்தின்பெயர்-மூர்க்கன்-க ௫அ

வருகருவழலேயின்பே ரிராசமாநாகமாகுங்
குரவியபறவைநாகங் குக்குடசர்ப்பமென்ப
பரவியபடம்பணம்பை படப்பொறியுத்துதித்து
கருதியதட்டநஞ்சு காலும்பல்லதட்டங்காற்றும்

கருவழலைப்பாம்பின்பெயர்-இராசம-நாகம்-பறவைநாகத்தின்பெ
யர்-குக்குடசர்ப்பம்-க- பாம்பின் படத்தின்பெயர்-பணம்-பை-ஆக-உ
படப்பொறியின்பெயர்-உத்தி-துத்தி-ஆக-உ-பாம்புனச்சுப்பல்லின்பெ
யர்-தட்டம்-க-பாம்புயிர்ப்பின்பெயர்-அட்டம்-க ௫௧

எகினமோதிமமராளம் விகங்கம்வக்கிராங்கமன்னஞ்
சிகியொடுஞமலிதோகை சிகாவளஞ்சிகண்டிமஞ்ஞை
யொகரமேமயூரமற்று முறுபிணிமுகங்கலாபி
மகிழ்விருநவிரம்பீலி கேகயமயில்பன்முப்பேர்

அன்னத்தின்பெயர்-எகினம்-ஓதிமம்-மராளம்-வுகங்கம்-வக்கிராங்கம்-ஆக-௫-மயிலின்பெயர்-சிகி-ஞமலி-தோகை-சிகாவளம்-சிகண்டி-மஞ்ஞை-ஒகரம்-மயூரம்-பிணிமுகம்-கலாபி-நவிரம்-பீலி-கேகயம்

சரணமேசிகண்டங்கூந்தல் சந்திரங்கலாபங்கூழை
பெருகியதோகைதொங்கல் பீலியாந்தூவியும்பேர்
மருவியவகவலாலல் மயிற்குரலேங்கலும்பேர்
வருமுருந்திறகின்முள்ள மற்றன்னச்சிறகுதூவி

மயிற்பீலியின்பெயர்-சரணம்-சிகண்டம்-கூந்தல்-சந்திரகம்-கலாபம்-கூழை-தோகை-தொங்கல்-தூவி-ஆக-௯-மயிற்குரலின்பெயர்-அகவல்-ஆவல்-ஏங்கல்-ஆக-௩, இறகின்முள்ளின்பெயர்-முருந்து-அன்னச்சிறகின்பெயர்-நூவி-௧ ௫௧

மன்னிபகலுழன்மற்றை வைநனேவைநதேயன்
பன்னகவைரியோடு தார்க்கியன்பறவைவேந்த
னுன்னியகருடநாம முவணமுமதற்கேகூறுஞ்
சொன்னசாதகப்புட்டானே சூழ்ந்தசாரங்கமென்ப

கருடன்பெயர்-கலுழன்-வைநன்-வைநதேயன்-பன்னகவைரி-தார்க்கியன்பறவை-வேந்தன்-உவணம்-ஆக-௭-சாதகப்புள்ளின்பெ[illegible]-சாரங்கம்-௧ ௫௨

சிம்புள்வாருண்டமற்றைச் செப்பியவருடியோடு
சம்பரந்துரோணமெய்ப்ப சாபமெண்காற்புட்பேராம்
வெம்பியநேமிப்புள்ளு விலம்புசக்கரவாகப்புட்
கொம்பியகோகம்யானைக் குருகென்றுகூறலாமே

எண்காற்புள்ளின்பெயர்-சிம்புள்-வாருண்டம்-வருடை-சம்பரம்-துரோணம்-சாபம்-ஆக-௭-சக்ரவாகப்புள்ளின்பெயர்-நேமிப்புள்-கோகம்-யானைக்குருகி-ஆக-௩ ௫௩

இருந்தபுண்டாமேகங்க மெருவையேபவணையோடு
பருஞ்சிறையவணமைந்துங் கழுகென்பசகுந்தமும்பேர்
திருந்தியசேனம்பாரசிகைபாறுசேருங்கங்கம்
பருந்தின்பேரசுணமாவே பகரிற்கேகயமென்றோமிழ்

கழுகின்பெயர்-புண்டாம்-கங்கம்-எருவை-பவணை-உவணம்-சகுந்தம்-ஆக-௬-பருந்தின்பெயர்-சேனம்-பாரசிகை-பாறு-கங்கம்-ஆக-௮-அசுணமாவின்பெயர்-கேகயம்-௧ ௫௪

சாருவேபரிவேவங்கி தத்தையேசுகமேகிள்ளை
கீரமேசுவாகதந்தான் சுளிபவந்திரையுமாகும்
கீரமுங்கிள்ளைதானுங் கிளர்கருங்கிளியினாமஞ்
சாரமாநிலாமுகிப்பேர் சகோரஞ்செம்போத்துக்குக்கில்

கிளியின்பெயர்-சாரு-அரி-வங்கி-தத்தை-சுகம்-கிள்ளை-கீரம்-சுவாக தம் அவந்திரை-ஆக ௯-கருங்கிளியின்பெயர்-கீரம்-கிள்ளை-ஆக௨-நில முகியின்பெயர்-சகோரம்-௧-செம்போத்தின்பெயர்-குக்கில்-௧

கோகிலங்களகண்டம்மே கோரகைகுயிலின்பேர்தா
னாகுமேபிகத்தினோடு பரபுட்டந்தானும்பேர்
கூகையுமுலூகமும்பேர்க் குடிஞையுங்குராலுங்கோட்டா
னாகணவாய்ப்புட்பூவை நவிற்றுஞ்சாரிகையுமாமே

குயிலின்பெயர்-கோகிலம்-களகண்டம்-கோரகை-பிகப்பரபுட்டம்-ஆக-௫-கோட்டான்பெயர்-கூகை - உலூகம்-குடிஞை-குரால்-ஆக-௫ நாகணவாய்ப்புள்ளின்பெயர்-பூவை-சாரிகை-ஆக-௨ ௫௬

கஞ்சனங்கிகிணியோடு வயவனேகஞ்சரீடம்
விஞ்சுபாரத்துவாசம் வலியனைவிதித்தபேரே
வஞ்சுளன்வயவன்மற்றை வயானென்பகாரிப்பிள்ளை
கஞ்சனங்கயவாயென்ப கருக்குருவிப்பேர்தானே

வலியன்பெயர்-கஞ்சனம்-கிகிணி-வயவன்-கஞ்சரீடம்-பாரத்துவாச ம்-ஆக ௫-காரிப்பிள்ளையின்பெயர்-வஞ்சுளன்-வயவன்-வயான்-ஆக-௩ கருக்குருவியின்பெயர்-கஞ்சனம்-கயவாய்-ஆக-௨ ௫௭

[illegible]ல்கவுதம்பொன்வாய்ப்புட் புட்டிடத்திரிசிலிப்பேர்
கருதியபெரும்புள்ளோடு கௌசிகமூமன்கூகை
குருகுகாலாயுதம்போர்க் குக்குடமாண்டலைப்புட்
பெருகுவாரணமென்றைந்தும் பேசியகோழியாமே

சிச்சிலியின்பெயர்-சிரல்-கவுதம்-பொன்வாய்ப்புள்-திட்டிரி-ஆக ௪ கூகையின்பெயர்-பெரும்புள்-கௌசிகம்-ஊமன் - ஆக-௩ கோழியின் பெயர்-குருகு-காலாயுதம்-குக்குடம்-ஆண்டலைப்புள்-வாரணம் ஆக ௫

குலிங்கமேசடகமேயூர்க் குருவியாம்புலிங்கமும்பேர்
நிலங்குபூழாங்கதம்ப வெடிகானங்கோழிப்பேர்
கலிங்கமேகம்புள்வானம் பாடியாங்குறும்பூழ்காடை
யிலங்குகோசரமேபுள்ளோ டிதல்சிவலிவையும்பேரே

ஊர்க்குருவியின்பெயர்-குலிங்கம்-சடகம்-புலிங்கம்-ஆக-௩ -நிலத்தி ன்பெயர்-பூழ்-௧-கானங்கோழியின்பெயர்-காதம்பம்-௧ - வானம்பாடியின் பெயர்-கலிங்கம்-கம்புள் - ஆக-௨-காடையின்பெயர் - குறும்பூழ்-௧-சிவ லின்பெயர்-கோரசம்-புள்-இதல்-ஆக-௩ ௫௮

சிரவமேகவுதாரிப்பேர் சில்லைபேபுகண்டையாகு
மருரியால ங்குகானே வாய்க்கபொய்யாப்புள்ளாமே
க[illegible]ம்வாயசமரிட்டங் கரும்பிள்ளைகொடியேகாக
மி[illegible]பிங்கலையெயாந்தை யின்னரமென்பதும்போ

கவுதாரியின்பெயர்-சிரவம்-க - க-பகண்டையின்பெயர்-சில்லை - க - பொய்யாப்புள்ளியின்பெயர்சலாங்கு-க- காகத்தின்பெயர்-கரடம்வாயசம்-அரிட்டம்-கரும்பிள்ளை-கொடி-ஆக-௫-ஆந்தையின்பெயர் - இருடிபிங்கலை கின்னரம்-ஆக-௩ ௬௰

கரும்புராவிக்டேர்பாரா வதமென்புமபோதமும்போ
பொருந்துதூதுணங்கபோதங் களாவமபுறாபொதுப்பேர்
பரிந்துகான்மேவுங்காள பதமேமாடப்புறுவாந்
திருந்தியவுள்ளலுள்ளான் சிதகந்தூக்கணங்குரீஇயே

கரும்புறுவின்பெயர்-பாராவதம்-போதம்-ஆக-௨-புறுப்பொதுவின்பெயர்-தூதுணம்-கபோதம்-களரவம்-ஆக-௩ - மாடப்புறுவின்பெயர்-காளபதம்-க- உள்ளான்பெயர்-உள்ளல்-க-தூக்கணங்குருவின்பெயர்-சிதகம்-க ௬௧

கருகியகம்பள்சிம்பக் கோழியாங்கவுஞ்சமன்றில்
குருகுவண்டானமென்ன கொய்யடிநாரையின்பேர்
பெருகியபிதாவேபோதப் பெருநாரைசிகரிபொன்றே
கருநாறைவெள்ளை நாரைசாரசமென்றுமே

கம்பங்கோழியின்பெயர்-கம்புள், க-அன்றிலின்பெயர்-கவுஞ்சம் - க கொய்யடிநாரையின்பெயர்-குருகு-வண்டானம்-ஆக-௨-பெருநாரையின்பெயர்-பிதா-போதா-ஆக-௨- கருநாரையின்பெயர்-சிகரி-க-வெள்ளைநாரையின்பெயர்-சாரசம்-க ௬௨

மன்னுநீர்க்காக்கைபர்க்க மற்றுங்காரண்டமும்பேர்
பன்னியகுரண்டங்கொக்காம் வலாகமும்பகமுமப்பே
ருன்னமேகிராமமற்றை யுற்குரோசத்தினொடு
கின்னரமின்னநீரிற் கிளர்ந்தெழுபறவையாமே

நீர்க்காக்கையின்பெயர் - அர்க்கம்- காரண்டம்-ஆக ௨-கொக்கின்பெயர்-குரண்டம்-வலாகம் பகம் ஆக ௩- நீர்வாழ்பறவையின்பெயர் உன்னம் கிரமம்-உற்குரோசம் கின்னரம் ஆக௪ ௬௩

அரியஞ்சிறுமக்கிய றுபதஞ்சிலீகமுஞ்சஞ்
சரிதமேசரகமேசஞ் சாளிகஞ்சுரும்புகீடம்
பிரமரமாவேகீதம் பிருங்கமேபிரசம்புள்ளு
வரிகொள்புண்டரீகந்தும்பி மதுபநாலேந்தும்வண்டாம்

வண்டின்பெயர்-அரி அளிஞ்சிமிறு மஞ்ஞீ-அறுபதம்சிலீ-முகம்-சஞ்சரிகம்-சரசம்-சஞ்சாளிகம் சுரும்பு கீடம்-பிரமரம் மா-கீதம்-பிருங்கம-பிரசம்-புள்-புண்டரீகம்-தும்பி-மதுபம்-ஆக உ௰ ௬௪

கரும்புளேகேசவந்தேன் கண்டபெண்வண்டினமஞ்
சுரும்பொடுமதுகரங்கள் சொற்றிடுந்தும்பியாண்பேர்
துருஞ்சிலாலாலமென்ப சேர்விலஞ்சடிகைவாவ
றருவகோபமீயன்மூதாச சரகமேபிரசந்தேனீ

பெண்வண்டின்பெயர், கரும்புள்-கேசவம்-தேன்-ஆக ௩ - ஆணவண்டின்பெயர்-சுரும்பு மதுகரம் மபி-ஆக-௩-நருஞ்சிலின்பெயர் - ஆலாலம்-௧ - வாவலின்பெயர், அஞ்சலிகை-௧ இந்திரகோபத்தின்பெயர் ஈயல்-மூதா-ஆக-௨-தேனீயின்பெயர் ௫௬

சிதடிசில்லிகைபேசில்லே சிள்வீடுசிமிளியும்பேர்
பதமுறுசலபம்விட்டிற் பறவைபாம் பதங்கமும்பேர்
விதமுறுநுளம்பிதானே கிகந்திமின்மினிகச்சோதங்
கொதுகின்பேர்மசகந்துள்ளல் கூறின்மற்றலசலும்பேர்

சிள்வீட்டிஇபெயர்-சிதடி-சில்லிகை சில்லி சிமிலி ஆக ௪-விட்டிற்பறவையின்பெயர், சலபம்-பதங்கம் ஆக-௨-நுளம்பின்பெயர்-நிலத்தி-௧-மின்மினியின்பெயர், கச்சோதம்-௧-கொதுகின்பெயர்-மசகம்-துள்ளல் ஆகலம் ஆக-௩ ௬௬

மயிலெழாவல்லாப்புள்ளின் வருத்தவாண்சேவலென்ப
மயிலெழாலெனுமிரண்டில் வாய்த்தவாண்சோத்தாகு
மயர்வறுகோழிகூகை யல்லாப்பெண்ணளகன்றேதார்
பெயர்பெறுமெல்லாப்புள்ளின்பெண்பெடைபெட்டைபேடை

மயிலும்எழாமல்லனவாகியபுள்ளினாண்பெயர், சேவல்-௧-மயில்-எழிலேனு மிரண்டினாணபெயர், போத்து-௧,கோழிகூகைகளின்பெயர் அளகுகபறவைப்பெண்பெயர்-பெடை-பெட்டை-பேடை-ஆக ௩

விகங்கமாசுகியேவீயே விகிரமேகுடிஞைபக்ஷே
சகுந்தம்பத்திரிபதங்கந் தாம்பிணிமுகத்திஞேடு
பசர்ந்திடுங்ககமேகோலக் பறவையேபதகம்போகில்
புசழ்ந்திடுகுரீஇமூவைந்தும் புட்பொதுவயானமும்பேர்

புட்பொதுவின்பெயர்-விகங்கம்-ஆசுகி-வீ-விகிரம்-குடிஞை-பக்ஷி-சகுந்தம்-பத்திரி-பதங்கம்-பிணிமுகம்-ககம்-பறவை-பதகம் - போகில் குரீஇ-வயானம்-ஆக-௰௬ ௬௮

சிறகொடுசதனம்வாசஞ் சிறைபிஞ்சக்கூரல்பக்கம்
பறைசதந்துவிதோகை பத்திரங்குழலேகூழை
யிறையெனவுரைத்தமூவைந் தேறறதுமிரங்கின்பேரே
யறைதருமரிட்டங்கோக மண்டமேசினையேமுட்டை

க்கத்துக்கும்பெயர். மூரலென்பது-நகைப்பு-பல்-சோற்றுக்கும்பெயர். மூரம்பென்பது-மேடு-பாறைக்கும்பெயர்-எ-று. ௨௨

சாரிகைபூவைசக்கஞ் சுழல்காற்றுந்தானுமாகும்
காரிகையழகுபெண்ணே கலித்துறையோர்நூற்கும்பேர்
வாரணங்கவசங்கோழி கடல்சங்குவாரிகைமா
பூருவமுதுமைமுன்பு கிழக்கென்றும்புகலலாமே.

இ-ள். சாரிகையென்பது-நாகணவாய்ப்புள்-சக்கம்-சுழல்காற்றுக்கும்பெயர். காரிகையென்பது- அழகு-பெண்-கட்டளைக்கலித்துறை-ஓர்யாப்பிலக்கணநூலுக்கும்பெயர். வாரணமென்பது-கவசம்-கோழி-தடுத்தல்-சங்கு-கடல்-யானைக்கும்பெயர். பூருவமென்பது-பழமை-முன்பு-கிழக்குத்திசைக்கும்பெயர்-எ-று. ௨௩

ஏரழகுழுபெற்றப்பேர் இராசிராசேனைகூட்டம்
பாருலகதேர்ப்பாரம் பயல்பள்ளம்பாதிசிற்றாள்
போரமர்சதயத்தோடு புகலுநென்முதலாஞ்சுமமை
பீருவயச்சமுற்றோன் பெயரொடுபுருவமாமே.

இ-ள். ஏரென்பது-அழகு - உழுமாட்டிற்கும்பெயர். இராசியென்பது-இராசி-சேனை-கூட்டத்துக்கும்பெயர். பாரென்பது-பூமி-தேரின்பரப்புக்கும்பெயர் பயலென்பது-பள்ளம்-பாதி - சிறுபையனுக்கும்பெயர். போரென்பது-யுத்தம்-சதயநட்சத்திரம்-நென்முதலியசுமைக்கும்பெயர்- பீருவென்பது-பயமுற்றோன் - புருவத்துக்கும்பெயர்-எ-

அருப்பமாரிடநோய்காடா மரணுடனூருமப்பேர்
மரக்கலாயிலியஞ்சோதி மாயவனுடன்முப்பேர்
நிரப்பென்பமிடிநிறைப்பேர் நிறையழியாமைநீர்ச்சால்
துருக்கமேயரண்கஸ்தூரி குங்குமமுஞ்சொல்லும்.

இ-ள். அருப்பமென்பது-வழுக்குநிலம்-வியாதி-காடு-கோட்டை -மருதநிலத்தூருக்கும்பெயர். மரக்காலென்பது-ஆயிலியநட்சத்திரம் - சோதிநட்சத்திரம்-திருமால்-கூத்துக்கும்பெயர். நிரப்பென்பது-தரித்திரம்-நிரப்புதலுக்கும்பெயர், நிறையென்பது- அழிவின்மை-நீர்ச்சாலுக்கும்பெயர். துருக்கமென்பது- மலைமேற்கோட்டை-கஸ்தூரிமரம்-குங்குமமரத்துக்கும்பெயர்-எ-று. ௨௫

குருதியேசிவப்பிரத்தங் குசனெனக்கூறுமுப்பேர்
பரிதியேயூர்கோள்வட்டம் பாக்கரனேமிநாற்பேர்
சுருதியேயாலிவேதப்பேர் சுரமருநெறிகான்மார்க்கம்
இரதிபித்தளைபெண்யானை மதன்றேவியிச்சைநாற்பேர்.

இ-ள். குருதியென்பது-சிவப்பு-உதிரம்-செவ்வாய்க்கும்பெயர். பரிதியென்பது-சூரியசந்திரனைச்சூழத்தோன்றும்வட்டம்-வட்டவடிவு - சூரியன்-சக்கராயுதத்துக்கும்பெயர். சுருதியென்பது-நாதம்- வேதத்திற்கும்பெயர். சுரமென்பது-அரியவழி-காடு-வழிக்கும்பெயர், இரதியென்பது-பித்தளை-பெண்யானை-இரதிதேவி- ஆசைக்கும்பெயர்-எ-று.

புரைகுற்றமுவமையில்லம் புரையுயர்ச்சியுமைம்பேரே
விரைமணஞ்சாந்துதூபம் வீரைதான்றுன்பம்வாரி
கரைவெள்ளையிவுளிவெண்மை கந்திரங்கவரிகாரை
சுரைகள்ளான்முலைதுளைப்பேர் துரும்பல்திமிறுள்ளல்.

இ-ள். புரையென்பது-குற்றம்-ஒப்பு-மனை-உட்டுளை-உயர்த்துக்கு ம்பெயர். விரையென்பது-வாசனை-கலவைச்சாந்து-தூபபுகைக்கும் பெயர். வீரையென்பது-துன்பம்-கடலிற்கும்பெயர். கரையென்பது-வெள்ளைக்குதிரை-வெண்மை-இடம்-சாமரம்-காரைபட்சிக்கும்பெயர். சுரையென்பது-கள்-பசுவின்முலை-உட்டுளைக்கும்பெயர். துரும்பலெ ன்பது-திமிறல்-துள்ளலுக்கும்பெயர்-எ-று. ௨௭

மருவெனல்குறிஞ்சியாழின் றிறத்தொடுமயக்கமும்பேர்
இருளொருநரகமையல் லிருளொடுகருமையென்ப
பொருநற்பேர்த்தலைவர்கூத்தர் புரவலர்பாணர்வீரர்
இருபிறப்பெயிறுபார்ப்பு மிந்துவும்புள்ளுமாமே.

இ-ள். மருவென்பது-குறிஞ்சியாழ்த்திறம்-மயக்கத்துக்கும்பெயர். இருளென்பது-ஒருவகை-நரகம்-மயக்கம்-இருட்டு-கறுப்புக்கும்பெயர் பொருநனென்பது-படைத்தலைவர்-நாடகர்-அரசர்-புகழ்ந்துபாடுவோர் படைவீரருக்கும்பெயர். இருபிறப்பென்பது-பல்-பிராமணர்-சந்திரன் பறவைக்கும்பெயர்-எ-று. ௨௮

மருதமேபெருமரஞ்செய் மருதநன்னிலப்பாடற்பேர்
எருவையேகொறுக்கைகோரை கழுகுசெம்பிரத்தமென்ப
தருமராசன்றன்புத்தன் சண்டனொடருகன்றானும்
கரியென்பதிருந்தைசான்று கரையடிசேகுநாற்பேர்.

இ-ள். மருதமென்பது-ஓர்மரம்-வயல்-மருதநிலத்திராகத்துக்கும் பெயர். எருவையென்பது-கொறுக்கை-கோரை-கழுகு-செம்பு-இரத் தத்துக்கும்பெயர். தருமராசனென்பது-புத்தன்-இயமன்-அருகனுக் கும்பெயர். கரியென்பது-சரி-சாட்சி-யானை-மரவயிரத்துக்கும்பெயர்-

கருவிபல்லியந்துணைக்கா ரணங்கள்யாழ்கவசமீட்டம்
பொருபடைக்கலந்தொடர்ச்சி புயல்பலவினைப்பேர்கூட்டம்
பரியின்பல்லணமேயாடை கசைபதின்மூப்பேர்பண்ணும்
சுரிகையேகவசமவாளாம் துவைபிண்ணாக்கிறைசியோசை.

இ-ள். கருவியென்பது-வாச்சியம்-உபகரணங்கள்-வீணை-கவசம்-ஈ ட்டு-ஆயுதம்-தொடர்பு-மேகம்-பலவினைப்பேர்-கூட்டம்-குதிரைச்சே ணம்-வஸ்திரம்-குதிரைச்சம்மட்டிக்கும்பெயர். சுரிகையென்பது-கவ சம்-உடைவாளுக்கும்பெயர். துவையென்பது-பிண்ணாக்கு-ஓசை-சத் தத்திற்கும்பெயர்-எ-று. ௩௰

குருகுபுள்ளிளமைநாரை கொல்லுலைமுகக்கோழி
சரிவெள்ளைமூலகாள்வா சுகதியொன்பானம்பேர்சாற்றும்
முரசேயுத்திரட்டாதிப்பேர் பறவையென்றுணாக்கலாமே
தருமேயுருட்சிதூத்தாம் சார்வென்பதிடமும்பற்றும்.

இ-ள். குருகென்பது-பறவைப்பொது-இளமை-நாரைப்பட்சி-கோ ல்னிலை-மூக்கு-கோழி-கைவளை-வெண்மை-மூலநட்சத்திரம்-குருக்கத் திக்கொடிக்கும்பெயர். முரசென்பது-உத்திரட்டாதிநட்சத்திரம்-வா ச்சியப்பொதுவிற்கும்பெயர்- தாளமென்பது-உருண்டவடிவு-முத்துக் கும்பெயர். சார்வென்பது-இடம்-பற்றுதலுக்கும்பெயர்-எ-று. ௯௧

முரண்வலிபகையாமென்ப மொய்ம்புதோள்வலியுமாகும்
உரையென்பகிளவிதேய்வாம் உவாத்ததியிளைபோன்பௌவம்
ஒருவிலொலிவிரைவுமாகும் நிதியிருநிதிபொன்னென்ப
உருநிறம்வடிவட்டைப்பேர் ஓதனஞ்சோறேயுண்டி.

இ-ள். முரணென்பது-வலிமை-பகைக்கும்பெயர். மொய்ம்மென்ப து-புயம்-வலிமைக்கும்பெயர். உரையென்பது-சொல்-தேய்தலுக்கும் பெயர். உவாவென்பது-யானை-இளையோன்-பூரணைக்கும்பெயர். ஒரு லென்பது-சத்தம்-சீக்கிரத்துக்கும்பெயர். நிதியென்பது - இவ்வகைநி தி-பொன்னுக்கும்பெயர். உருவென்பது-நிறம்-வடிவு - அட்டைக்கும் பெயர். ஓதனமென்பது-சோறு-உணவுக்கும்பெயர்-எ-று. ௯௨

அரிகிளிபுணரிமாறே னாம்மையில்நரன்றால்காந்தி
பரிபுகர்பன்றிசிங்கம் பகையுறபாயல்சோலை
வரிமதிசேகுதேனை வானரமியமன்மூங்கில்
எரிபுனைநிறம்பொன்பாந்த ளிரவிகண்வரிதார்பச்சை.

அரிசிநெற்கதிர்கள்கூர்மை யளிபதடகலமேயிர்வாள்
அரிதசல்சயனநேமி யடல்விசிபலகையரித்தல்
பரிபுரமதனுட்பெய்த பரலோடிவ்வாறேழைந்தாம்
அரிதமேபசுமைதிக்காம் ஆர்ப்பொலிசிரிதகற்பேரே.

இவற்றின்பொருளை அரியென்பது-கிளி-கடல்-திருமால்-இரதம்-அ ச்சவடிவு-தேவேந்திரன-காற்று-ஒளி-குதிரை-குற்றம்-பன்றி-சிங்கம்-ப கை-புரை-பாயல்-சோலை-வரி-சந்திரன்-மரவயிரம்-தவளை-குரங்கு-இ யமன்-மூங்கில்-நெருப்பு-உட்டுளை-நிறம்-பொன்-பாம்பு-சூரியன்-கண வரி-பூமாலை-பச்சை-அரிசி-நெற்கதிர்கள்-கூர்மை-வண்டு-ஆயுதம்- இா ம்சம்-அரிதல்-சயனம்-சக்கராயுதம்-வலிமை-விசிப்பலகை-வாச்சியம - அரித்தல்-சிலம்பினுட்பருக்கைக்கல்லுக்கும்பெயர். அரிதமென்பது- பசியநிறம்-திசைக்கும்பெயர். ஆர்ப்பென்பது-சத்தம் - நகைப்புக்கும் பெயர். ௯௩

அருவியேமலைச்சார்வாறு மரிதினைத்தாளுமாகும்
அரலையோகனிவித்தாழி மரங்கழலையுமாமென்ப
கரடமேபதம்பாய்கின்ற சுவட்டொடுகாக்கையாகும்
சுரியருன்பெண்மயிர்க்கோ சொல்லுமாண்மயிர்க்கும்பேராம்.

இ-ள். அருவியென்பது-மலைச்சாரலாறு- தினைத்தாளுக்கும்பெயர். அரலையென்பது-பாலைக்கிழத்தி-விதை-கடல்-மரம் -கழலைக்கட்டிக்கு ம்பெயர். கரடமென்பது - மதம்பாய்கவுள்காக்கைக்கும்பெயர். சுரிய லென்பது-பெண்மயிர்-ஆண்மயிருக்கும்பெயர்-எ-று. ௯௪

திருவென்பகமலைசெல்வஞ் சிறப்பெ...
பரிவென்பதுன்பன்பம் வகருமன்பிற்குமபெ...
கரையேநீர்க்கரைசேர்வாகும் கைத்துநீணிதிவெறுப்பய...
சுரகுழிமகவான்றேவ மந்திரியிருபேர்சொல்லும்.

இ-ள். திருவென்பது-திருமகள்-செல்வம் - சிறப்புக்குப்பெயர். பரிவென்பது-துன்பம்-சுகம்-அன்பிற்கும்பெயர். கரையென்பது - நீர்க்கரை-சேர்வுக்கும்பெயர். கைச்செனன்பது-பொன்-வெருப்புக்குமபெயர் சுரகுருவென்பது-இந்திரன்-பிரகஸ்பதிக்கும்பெயர்-எ-று. ௫௫

அரற்றலேயழுகையோசை ஐதென்பவிரைவுநொய்பாம்
இரத்தஞ்செந்நீர்சிவப்பாம் இலங்கலியலந்தென்காந்தாள்
அரக்கென்பமெழுகுகள்ளின் விகற்பஞ்சிவப்புமாகும்
அருச்சுனமருதம்வெண்மை அறிக்கைதானறிவுபற்றும்.

இ-ள். அரற்றலென்பது-அழுகல்-சத்தத்திற்கும்பெயர். ஐதென்பது-சீக்கிரம்-நுண்மைகரும்பெபர். இரத்தமென்பது- உதிரம்-சிவப்புக்கும்பெயர். இலாங்கலியென்பது-கலப்பை-தென்னமரம்- செங்காந்தளுக்குமபெயர். அரக்கென்பது-மெழுகு-கள்ளின்விகற்பம்-சிறப்புக்குப்பெயர். அருச்சுனமென்பது-மருதமரம்-வெளுப்புக்கும்பெயர்- அறிக்கையென்பது- அறிவு-பற்றுக்கும்பெயர்-எ-று. ௫௬

அரந்தையென்பதுகுறிஞ்சி யாழிசைதுன்பமாகும்
அருந்தலேயருமைபுண்டல் அளித்தலுங்கொடுத்தல்காத்த
லரங்கமாற்றிடைக்குறைப்பேர் ராடிடஞ்சபையுமப்பேர்
அரங்குபோரிடம்வட்டாடு மிடஞ்சவைமனைவிகற்பாம்.

இ-ள். அரந்தையென்பது-குறிஞ்சியாழிசை வருத்தத்துக்கும்பெயர். அருந்தலென்பது-அருமை-உண்டலுக்கும்பெயர். அளித்தலென்பது-கொடுத்தல்-காத்தலுக்குமபெயர். அரங்கமென்பது-போர்க்களமசூதாடுகிறதற்கு வகுத்தவறை- சபை-மனைவி-கற்பத்துக்கும்பெயர்-எ-

முருந்தென்பமயிலின்றோகை முதன்முள்ளுத்தவளமாகும்
விருந்தமேகிளையின்கூட்டம் விலங்கின்கூட்டமுமென்றாகும்
குரங்குவானரவிலங்கின் பொதுமிருகோணலாகும்
எருந்துரல்கிளிஞ்சலென்ப இடஞ்செல்வம்விசாலம்வாமம்.

இ-ள். முருந்தென்பது-மயிலிறகினடியிற்குருத்து- வெண்மைக்கும்பெயர். விருந்தமென்பது-சுற்றத்தின்கூட்டம்- மிருகத்தின்கூட்டத்திற்கும்பெயர். குரங்கென்பது-குரங்கு-மிருகத்தின்பொது-வளைவிற்கும்பெயர். எருந்தென்பது-உரல்-கிளிஞ்சலுக்கும்பெயர். இடமென்பது-ஐசுவரியம்- அகலம்-இடப்பக்கத்துக்கும்பெயர்-எ-று. ௫௮

...ல்லார் ஆனெனன்பதிடைச்செலாவாம்
...கவுசோழ னழகொடுமேன்மைக்கும்பேர்
...ருகர்தந்துவாயார் கதிக்கொலையாளர்வண்ணார்
தாருகாரியென்பகாளி சண்முகன்றனுமாமே.

இ-ள். ஆரியனென்பது-மிலேச்சர்-நல்லோருச்கும்பெயர். ஆனெனன்பது-இடைச்சேரல்-பசுவுக்கும்பெயர். ஆரியென்பது-கதவு-சோழன்-அழகு-மேன்மைக்கும்பெயர். காருகரென்பது-செப்-ஓர்கொலையாளர் வண்ணாருக்கும்பெயா. தாருகாரியென்பது-காளி-முருகக்கடவுளுக்கு மபெயர்-எ-று. ௩௯

சார்கூடலொருதாரப்பேர் சான்றோன்மான்றலைநாள்பானு
வேரென்பமரவேர்வேர்வாம் விழைச்சுநல்லிளமைபோக
பாரவாரக்தான்வாரி கடற்கரையிருபேர்பன்னுஞ்
சாரணரென்பவொற்றர் சமண்முனிவர்க்கும்பேராம்.

இ-ள். சாரென்பது-கூடுதல்-ஓமரதத்திற்கும்பெயர். சான்றோனென்பது-மிருகசீரிடநட்சத்திரம்-சூரியனுக்கும்பெயர். வேரென்பது-மரவேர்-வேர்வைக்கும்பெயர்-விழைச்சென்பது-கட்டிளமை- புணர்ச்சிக்கும்பெயர். பாரவாரமென்பது-கடல்-கடற்கரைக்கும்பெயர். சாரணரென்பது-வேவுகாரர்-சமணவிருடிகட்கும்பெயர்-எ-று. ௪௰

அராகஞ்செந்நிறமேபாலை யாழ்முடுகியற்பாட்டாசை
கரேணுவபிடியானைக்குங் கதிக்கொலையானைக்கும்பேர்
கிராணமேகிராணமூக்காம் கிளர்சிறுவட்டிலும்பேர்
கரீரமேயிடர்வகத்தி கரியின்பல்லடிமுளைப்பேர்.

இ-ள். அராகமென்பது-செந்நிறம்-பாலையாழ்-முடுகிபல் - இசைப்பாட்டு-ஆசைக்கும்பெயர். கரேணுவென்பது- பெணயானைக்கும்பெயர். கிராணமெனபது-கிரகணம்-மூக்கு-சிறுவட்டிலுக்கும்பெயர். கரீரமென்பது-அகத்திமரம்-யானைபபலலடி-முளைக்கும்பெயர்-எ-று. ௪௧

ரகரவெதுகை-முற்றிற்று.

---

# லகரவெதுகை.

---

புலவர்பாடினரேகூத்தர் புதனும்பார்கவிகண்ணளர்
வல்லனேவெற்றியாளன் மருவுந்தேர்ப்பாகன்மாயோ
னலவுநெற்கதிரோயாதி பலகறைநுளம்பெண்ணேதி
யலரிகண்வரியருக்க னழகொருமரம்பூவாமே.

இ-ள். புலவரென்பது-பாடுவோர்-கூத்தர்-புதன்-தேவர்-கவிஞர்-கம்மாளருக்கும்பெயர். வல்லவனென்பது- வெற்றியாளன்-தேர்பபாகன் திருமாலுக்கும்பெயர். அலவனென்பது-நெற்கதிர்முதலியபலதுறைவிலப்

பூச்சி-இலக்கம்-ஆயுதத்துக்கும்பெயர். அலரியென்பது-கண்வரி-சூரிய ன்-அழகு-ஓர்மரம்-பூம்பொதுவிற்கும்பெயர்-எ-று. ௪

ஆலமேவடவிருக்க மலர்நெஞ்சோடலாபூநீராம்
மூலம்வேர்முதலேயேது முகிர்வுறுகிழங்கோர்நாளாம்
சீலமேகுணந்தடித்த றிகழ்சரித்திரமும்பேர்
சாலமேவல்லைசாலேக மராமரஞ்சவைமதிப்பேர்.

இ-ள். ஆலமென்பது-ஆலமரம்-விடம்-மலர்ந்தபூ-நீருக்கும்பெயர். மூலமென்பது-வேர்-முதல்-காரணம்-கிழங்கு-ஓர்நட்சத்திரத்துக்கும் பெயர். சீலமென்பது-குணம்-தண்டித்தல்-சரித்திரத்திற்கும்பெயர். சாலமென்பது-வலை-பலமணி-ஆச்சாமரம்-கூட்டம்-மதிலுக்கும்பெயர்-எ-

காலம்நேவகளைகாலப்பேர் கலலம்யாழ்பூணுவாய
சாலகங்காலசப்பேர் தானேபூமொட்டுமாகும்
தாலமுண்கல்மேகாவே தராதலம்பனைபேநாற்பேர்
ஆலவாடுதலொலிப்பேர் அறுசுவைசித்திரைளாடை.

இ-ள். காலமென்பது-விடியற்காலம்-பொழுதிற்கும்பெயர். கலமென்பது-கலப்பை-யாழ்-ஆபரணம்-மரக்கலத்திற்கும்பெயர். சாலகமென்பது-பலகணி-பூவரும்புக்கும்பெயர். தாலமென்பது-ஆடுதல்-சத்தத்திற்கும்பெயர். அறுசுவையென்பது-சித்திரைநட்சத்திரம்-வஸ்திரத்திற்கும்பெயர்-எ-று. ௫

இலம்பகமத்தியாய நுதற்சூட்டென்றிருபேராமே
இலஞ்சிமாவாவிகொப்பூழெயில்குணமகிழ்மெரி
பலங்கனிபயன்கால்சேனை பலங்கிழங்கறுபோகும்
அலங்கலென்பதுமாலையசைவொடுசளிரிலங்கல்.

இ-ள். இலம்பகமென்பது-அத்தியாயம்-நுதலணி-மாலைக்கும்பெயர். இலஞ்சியென்பது-மாமரம்-குளம்-உந்தி-மதில்-குணம்-மகிழமரம்-எரிக்கும்பெயர். பலமென்பது-பழம்-பயன்-கால்-சேனை-வலிமை-கிழங்கிற்கும்பெயர். அலங்கலென்பது-பூமாலை-அசைதல்-தளிர்-ஒளிசெய்தலுக்கும்பெயர்-எ-று. ௬

ஒலியென்பதிடியேகாற்றே யோசையென்றுமும்பேர்
ஒலியலேயாறுநதோளு முகித்தவாடையும்பைந்தாரும்
கலுழியேகான்யாறென்ப கலங்கியநீருமாமே
கலைமதிப்பங்குநூல்சு[illegible]லவிநூலிரலைகாஞ்சி.

இ-ள். ஒலியென்பது-இடி-காற்று-சத்தத்திற்கும்பெயர். ஒலியலென்பது-நதி-தோள்-வஸ்திரம்-பூமாலைக்கும்பெயர். கலுழியென்பது-காட்டாறு-கலங்கனீருக்கும்பெயர். கலையென்பது-மதியின்பங்கு-சீலை-வித்தை-நூல்-ஆண்மான்-மேகலைக்கும்பெயர்-எ-று. ௭

பீலியேயாலவட்டம் பெருவரைகலாபிதோகை
பாலிகையுதகிவட்டம்பட்டவாண்முட்டியும்பேர்
வேலியூர்பதிகாவற்பேர் மெதுமையெல்லையேசடை
[illegible]ட்டைப்புகார்த்தை ஆருத்திரோற்பலவகையம்பேர்.

இ-ள். பீலியென்பது-ஆலவட்டம்-மலை-மயில் - மயிற்றோகைக்கும்பெயர் பாலிகையென்பது-உதடு-வட்டவடிவு-படை-வாளி-முட்டுக்கு
ம்பெயர். வேலியென்பது-ஊர்-மதில் - காவலுக்கும்பெயர். மெத்தையென்பது-அமளி-சட்டைக்கும்பெயர். தோலென்பது-யானை -எண்வகைவனப்பிலொன்று-சொல்-ஊன்றுந்துருத்தி-தோலாற்செய்தகேடகத்துக்கும்பெயர்-எ-று. சா

பாலையோர்மாநிலம்மன் னிலத்தினிற்பாடலும்பேர்
வேலையேகடலதற்கு மேவிபகனாயோர்காலம்
மாலையேயிரவோடந்தி மாலிகையொழுங்குநாற்பேர்
சாலையேகுதிரைப்பந்தி யறப்புறந்தானுமாமே.

இ-ள். பாலையென்பது-ஓர்மரம்-ஓர்நிலம்- அந்நிலப்பாடலுக்கும்பெயர். வேலையென்பது-கடல்-கடற்கரை-நிகழ்காலத்திற்கும்பெயர். மாலையென்பது-இராத்திரி-அந்திப்பொழுது-மாலை- ஒழுங்குக்கும்பெயர். சாலையென்பது-குதிரைப்பந்தி-அறத்தின்சாலைக்கும்பெயர்-எ-று. எ

அல்லிவெள்ளாம்பல்காய வகவிதழாகமுப்பேர்
அல்லிராவிருளேயென்ப ஆகமார்புடலுமாமே
சில்லியேவட்டஞ்சிறை தேருருள்சில்லீடென்ப
வல்லியாய்ப்பாடிவள்ளி வறைவொடுநிகளமாமே.

இ-ள். அல்லியென்மது-வெள்ளாம்பல்-காயாமரம்-உள்ளிதழுக்கும்பெயர். அல்லென்பது-இரவு-இருளுக்கும்பெயர். ஆகமென்பது-மார்பு-உடம்புக்கும்பெயர். சில்லியென்பது-வட்டம்-சிறுகிரை- தேருருள்-சிள-வண்டுக்கும்பெயர். வல்லியென்பது-இடைச்சேரி-படர்கொடி-அளவுகோல்-விலங்குக்கும்பெயர்-எ-று. அ

இல்லில்லாளில்லையென்ற விராசிசாவிடம்வீடாறே
மல்வளம்வலியிமேறேடு மாயவனுடன்முப்பேர்
சில்லியென்பதுபிரண்டை சிள்வீடுதூர்த்தைகதுப்பே
ரெல்லையேயிரவுதொல்லை கசிப்புடன்சிறுபோதாமே.

இ-ள். இல்லென்பது-மனைவி-இல்லையெனல் - இராசி-சாவு-இடம்-வீட்டிற்கும்பெயர். மல்லென்பது-வளமை-வலிமை-திருமால்- கூத்திற்கும்பெயர். சில்லையென்பது-பிரண்டை-சிள்வண்டு-தூர்த்தைக்கும்பெயர். எல்லையென்பது-காலவிரைவு-பழமை-[illegible]ம் - சிறுபொழுதுக்கும்பெயர்-எ-று. சூ

வில்லென்பமூலநாளாம் வெண்சிலையொளியுமப்பே
வல்வலிவிரைவுசூதா மலர்தலேயெதிர்தறோன்றல்
புல்புலிபுணர்ச்சிபுன்மை புதல்பனையனுடநாளாம்
கொல்லென்பதனைச்சொலையங் கொலையேவல்வருத்தநாற்பேர்.

இ-ள். வில்லென்பது-மூலநட்சத்திரம்-வில்- பிரகாசத்துக்கும்பெயர். வல்லென்பது-வலிமை-சீக்கிரம்-சூதாடுங்கருவிக்கும்பெயர். மலர்தலென்பது-எதிர்த்தல்-தோன்றலுக்கும்பெயர். புல்லென்பது-புலி-கல்வி-அற்பம்-புல-பனைமரம்-அனுடநட்சத்திரத்திற்கும்பெயர். கொ

ல்லென்பது-அசைச்சொல்-அனுமானம்-கொல்லென்னேவல் - துன்பத்திற்கும்பெயர்-எ-று. (ல)

மால்புதன்பெருமைமேக மாயவன்மயக்கங்காற்றே
ஆலோடவிரண்டுசொல்லு மாலென்பதல்லவும்பேர்
வான்வெண்மைமிகுதிதூதாம் வசந்தனேதென்றல்காமன்
சால்புமாட்சிமைசான்றாண்மை சாற்றியவிருபேர்காணே

இ-ள், மாலென்பது-புகன்-பெருமை-மேகம்-திருமால்-மயக்கம்-காற்றுக்குமபெயர்-ஆலென்பது-அல்லென்பது-ஆமென்பதற்கும்-அல்லவென்பதகும்பெயர்-வாலென்பது-வெண்மை-மிகுதி - சுத்தத்திற்கும்பெயர்-வசந்தமென்பது-தென்றல்-மன்மதனுக்குமபெயர் -சால்பென்பது-மாண்புடைமை-சாபுடைமைக்கும்பெயர்-எ-று, (கக)

வலம்புரிச்சங்குநந்தியா வர்த்தமோமரமுப்பேரே
புலம்பதுதனிமையச்சம் பொய்யெனபொக்கம்பொந்தாம்
சிலம்பொலிஞெகிழிகுன்றும் செருந்திபஞ்சரமவாட்கோரை
விலங்குகாற்றளைகுறுக்கு மிருகத்தின்பொதுவுமாமே

இ-ள், வலம்புரியென்பது - சங்கு-நந்தியாவட்டம்- ஓர்மரத்திற்கும்பெயர்-புலம்பென்பது-சத்தம் -தனிமை-பயத்திற்கும்பெயர் - பொய்யென்பது-அபத்தம்-மரப்பொந்துக்கும்பெயர்-சிலம்பென்பது- சத்தம்-சிலம்பு-மலைக்கும்பெயர்-செருந்தியென்பது-செருந்திமரம் - வாட்கோரைக்கும்பெயர்-விலங்கென்பது-கால்-விலங்கு- குறுக்கு-மிருகத்தின்பொதுவிற்கும்பெயர்-எ-று. (கஉ)

உலகமேதிசைவெண்பூமி யுபர்குணஞ்சனமுயர்ந்தோர்
அலவனேஞெண்டுபூனை யாபுவிகடகராசி
இலயமேகூததுங்கூத்தின் விகற்பமுமிருபேரொன்ப
வலவைவஞ்சப்பெண்வல்லோன் வருடைசான்சிம்புளாடம்

இ-ள். உலகமென்பது திக்கு- ஆகாயம்- பூமி-குணம்-சனம் - உயர்ந்தோருக்கும்பெயர் -அலவனென்பது-நண்டு-பூனை-சந்திரன் -கடகவிராசிக்கும்பெயர்-இலயமென்பது-கூத்து-கூத்தின்-வேறுபாட்டுக்கும்பெயர்-வலவையென்பது-காளி ஏவற்பெண்-வல்லவனுக்கும்பெயர் - வருடையென்பது-எண்காற்புள்-ஆட்டுக்கும்பெயர்-எ-று. (கங)

கலாபமேமணிவடம்மே கலைமயிலிறகுமுப்பேர்
சிலீமுகமுலைக்கண்வண்டு சித்திரபுங்கநதானும்
சலாகைநன்மணிநாராசஞ் சவளமுமாகுமென்ப
விலோதம்பெண்மயிர்பதாகை விடமென்பநஞ்சுந்தேளும்

இ-ள். கலாபமென்பது-மணிவடம்-பதினாறுகோவை-மணியுண்மாதரிடைபணி-மயிலிறகுக்கும்பெயர்-சிலீமுகமென்பது- முலைக்கண்-வண்டு-அம்புக்கும்பெயர்-சலாகையென்பது-செய்வகமணி- சலாகு-ஈட்டிக்கும்பெயர்-விலோதமென்பது-கூந்தல் -பெருங்கொடிக்கும்பெயர்-விடமென்பது-நஞ்சு-தேளுக்கும்பெயர்-எ-று. (கச)

அ

செல்லிடியேவன்மேகஞ் சிதலையுமாகுமென்ப
எல்லொளிபகலிகழ்ச்சி யிரவுடனிரவியைம்பேர்
சொல்லுரைகீர்த்திநெல்லாம் கொடுத்தலேவளர்த்தற்பற்றல்
கல்லொலிமலைகள்ளென்ப காண்டநீர்க்காக்கைசெப்பாம்

இ-ள். செல்லென்பது இடி-செல்லென்னேவல்-மேகம்- கறையானுக்குமபெயர்-எல்லென்பது-பிரகாசம்-பகல்இகழ்ச்சி-இராத்திரி - சூரியனுக்குமபெயர்-சொல்லென்பது-வார்த்தை-புகழ் - நெல்லுக்கும்பெயர் தொடுத்தலென்பது-வளர்த்தல்-பற்றலுக்கும்பெயர்-கல்லென்பது-சத்தம்-மலைகல்லுக்கும்பெயர்- காண்டமென்பது - நீர்க்கரைசெப்புக்கும் பெயர்-எ-று. (௧௫)

கலிவஞ்சமொலியேவாரி கடையுகவலிமையைம்பேரே
சிலையொலிமலைகல்வில்லாம் செடியொளிசெறிவுதீதாம்
தலமென்பதிலைபுவிப்பேர் தலையிடக்கலைவிண்ணுதி
திலமேமஞ்சாடியெள்ளாம் திலகமஞ்சாடிபொட்டாம்

இ-ள், கலியென்பது-வஞ்சனை-சத்தம்-கடல்-கடையுகம்-வலிமைக்குமபெயர்-சிலையென்பது-சத்தம்-மலை-கல்-வில்லுக்கும்பெயர் - செடியென்பது-பிரகாசம்-நெருக்கம்-தீமைக்கும்பெயர்-தலமென்பது- இலை-பூமிக்கும்பெயர்-தலையென்பது-இடம்-சிரசு-ஆகாயம்-முதலுக்குமபெயர்-திலமென்பது- மஞ்சாடிமரம-எள்ளுக்குமபெயர்-திலகமென்பது மஞ்சாடிமரம்-திலதத்துக்கும்பெயர்-எ-று, (௧௬)

வல்லிகான்விரைவுமைந்தாம் வடமணிவடமாறும்பு
பல்லமோர்கணக்குப்பாணம் பல்லணங்காடிநாற்பேர்
மல்லலேவலிவளப்பேர் வாயிலைம்புலன்கபாடம்
முல்லைமல்லிகையேவென்றி முல்லைநன்னிலங்கற்பாமே

இ-ள், வல்லியென்பது-காடு-காலவிரைவு-வலிமைக்கும்பெயர்-வடமென்பது-மணிவடம்-ஆலமரம்-கயிற்றுக்கும்பெயர் - பல்லமென்பது-ஓரெண்-அம்பு-குதிரைக்கல்லணை-காடிக்குமபெயர்-மல்லலென்பது-வலிமை-வளமைக்கும்பெயர்-வாயிலென்பது-ஐம்புலன் -கதவுக்குமபெயர்-முல்லையென்பது-வனமல்லிகை-வெற்றி-முல்லைநிலம் - கற்புக்கும்பெயர்-எ-று, (௧௭)

கோலென்பதீட்டிவாட்கோ றுகிலிகைதுலாஞ்சம்மட்டி
சிலமன்னவன்செககோறி ரட்டியாழ்சரம்போடம்பு
நீலமஞ்சனக்கோலோடு நீளிலந்தையும்பன்னோர்பேர்
காலிலியருணன்பாம்பு கற்றேடுமுப்போமே

இ-ள், கோலென்பது-ஈட்டி-வாட்கோல்-எழுதுகோல்-தராசு -குதிரைச்சம்மட்டி-செங்கோல்-திரண்டவடிவு-யாழ்நரம்பு-பாணம்-மையெழுதுகோல்-இலந்தைமரத்துக்கும்பெயர்-காலிலியென்பது - சூரியன்தேர்ப்பாகன்-பாம்பு-காற்றுக்கும்பெயர்-எ-று, (௧அ)

கூலமேபண்ணிகாரம் புனற்கரைகோவிலங்கின்
வாலொடாவணமேபாகல் வால்பொடுகூரங்கேண்பேரே

காலிடமரக்கால்பிள்ளை குறுந்தறிவனங்காம்பூற்றங்
காலனங்குரங்கால்வாய்க்கால் காற்றுத்தேருநாள்பன்மூன்றே

இ-ள், கூலமென்பது-பலபண்டம்-நீர்க்கரை-பசு -மிருகத்தின்வால்
கடைவீதி-பாசல்-சிறுவரம்பு-குரங்குக்கும்பெயர் -காலென்பது-இடம்
மரக்கால்-புத்திரன்-குறுந்தறி-காடு-மலர்க்காம்பு-பற்றுக்கோல்-காலன்
மூலை-பாதம-வாய்க்கால்-காற்று-தேருருளைக்கும்பெயர்-எ-று, (௧௯)

கோலமேயழகுபன்றி பாக்குநீர்கொழுந்துபீர்க்காம்
மாலியேபிரவிகள்ளாம் மாந்தலேமரித்தலுண்டல்
வேலிபில்படைக்கலம்பேர் வேதண்டங்கைலேவெற்பாம்
சாலிநெற்பொதுவுங்கள்ளு மருந்ததிதானுமாமே

இ-ள், கோலமென்பது-அழகு-பன்றி-பாக்கு-நீரோட்டம்-பீர்க்குக்
கும்பெயர்-மாலியென்பது-சூரியன்-கள்ளுக்கும்பெயர் - மாந்தலென்ப
து-சாதல்-உண்டலுக்கும்பெயர்-வேலென்பது-வேலாயுதம் - ஆயுதப்
பொதுவிற்கும்பெயர்-வேதண்டமென்பது - வெள்ளிமலைக்கும்பெயர்-
சாலியென்பது-நெற்பாது-கள்-அருந்ததிக்கும்பெயர்-எ-று. (௨௰)

உலவைகான்மரத்தின்கொம்போ டுறுதழைவிலங்கின்கோடாம்
மலேதலேபொரல்குடற்பேர் மந்திரிகுபேரன்வெள்ளி
அலர்பழிவிருபூநீராம் அவிர்தலேயொளிபிறற்பேர்
எலிபூரநாளெலிப்பேர் இரணம்பொன்கடன்மாணிக்கம்

இ-ள், உலவையென்பது-காற்று-மரக்கொம்பு-தழை - மிருகத்தின்
கொம்புக்கும்பெயர்-மலேதலென்பது-பொருதல்- அணிதலுக்கும்பெய
ர்-மந்திரியென்பது-குபேரன்-சுக்கிரனுக்கும்பெயர்-அலரென்பது-பழி
ச்சொல்-மலர்ந்தபூ நீருக்கும்பெயர்-அவிர்தலென்பது - ஒளிசெய்தல்-
பிறலுக்கும்பெயர்-எலியென்பது-பூசநட்சத்திரம்- எலிக்கும்பெயர்-இ
ரணமென்பது-பொன்-கடன்-மாணிக்கத்திற்கும்பெயர்-எ-று, (௨௧)

ஆலயநகரங்கோயி லானையுன்கூட முப்பேர்
பாலமேமழுநெற்றிப்பேர் பவித்திரஞ்சுசிதருப்பை
நூலோர்மந்திரிகள்பார்ப்பார் நுவல்கவிப்புலவற்கும்பேர்
வேலாவலயந்தான்பூமி விரிகடலிருபேராமே

இ-ள், ஆலயமென்பது-நகரம்-தேவாலயம்-யானைநிற்குங்கூடத்திற்
கும்பெயர்-பாலமென்பது-மழுப்படை-நெற்றிக்கும்பெயர்- பவித்திர
மென்பது- தூய்மை- தருப்பைக்கும்பெயர்- நூலோரென்பது-மந்திரிக
ள்-பிராமணர்-புலவருக்கும்பெயர்-வேலாவலயமென்பது-பூமி-கடலுக்
கும்பெயர்-எ-று, (௨௨)

சூலியேகருப்பப்பெண்ணுந் துர்க்கையுஞ்சிவனுமுப்பேர்
வாலியேபலாயுதன்கிட் கிந்தையின்மன்னன்பேராம்
பால்புடையியல்புதிக்குப் பகுத்தல்பாலென்னுமைம்பேர்
ஏலமாமயிர்ச்சாந்தோடே பேலத்தின்யிகற்புமாமே

இ-ள். சூலியென்பது-கருப்பவதி- துர்க்கை- சிவனுக்கும்பெயர்-வா
லியென்பதுபலதேவன்கிட்கிந்தை-மன்னனுக்கும்பெயர்-பாலென்பது

பக்கம்-குணம்-திசை-பங்கு-பாலுக்கும்பெயர்-ஏலமென்பது மயிர்ச்சாந்து-ஏலத்தின்வேறுபாட்டிற்கும்பெயர்-எ-று, (உ௯)

லகரவெதுகை-முற்றிற்று.

---

# வகரவெதுகை.

---

நவமென்புதுமைகேண்மை யொன்பதுநற்காரகாலம்
கவனமேகலக்கம்வெம்மை குதிரையின்கதிபோர்காடாம்
உவணமேகலுழனுச்சி முளர்ச்சிக்கும்கழுகுக்கும்பேர்
பவனமேயிராசிபூமி படர்காற்றுமனையேகோயில்

இ-ள். நவமென்பது-புதுமை-நட்பு-ஒன்பது-மழைகாலத்திற்கும்பெயர்-கவனமென்பது-கலக்கம்வெப்பம்குதிரைநடையுத்தம் காட்டுக்கும்பெயர்-உவணமென்பது-கருடன்-உயரம கழுகிற்கும்பெயர்-பவனமென்பது-இராசிபொது-பூமிகாற்றுவீடு-அரசன்மனைவிக்கும்பெயர்.

புவனநீர்புவியுமாகும் புரத்தலேகாத்தல்வண்மை
நுவணைநூனுண்மைபிண்டி நூலேசாத்திரமுந்தந்தும்
தவமென்பமிகுதிகுன்றல் தந்தேநூல்சாத்திரப்பேர்
சிவநன்மைகுறுணிமுத்தி சீவனேயுயிர்வியாழம்

இ-ள், புவனமென்பது-நீர்-பூமிக்கும்பெயர்-புரத்தலென்பது-காத்தல்-கொடுத்தலுக்கும்பெயர்-நுவணையென்பது-கல்வி-நூல்-நுட்பம்-தினைமாவிற்கும்பெயர்-நூலென்பது-சாஸ்திரம-பஞ்சிநூலுக்கும்பெயர் தபமென்பது-மிகுதி-குறைதலுக்கும்பெயர்-தந்தென்பது-பஞ்சிநூல்சாஸ்திரத்துக்கும்பெயர்-சிவமென்பது-நன்மை-குறுணி-மோட்சத்திற்கும்பெயர்-சீவனென்பது-உயிர்பிரகற்பதிக்கும்பெயர்-எ-று. (உ)

இவறலேமறதியாசை யென்பபேரிசைக்குமப்பே
இவர்தலேயெழுச்சியாசை யேறுதல்சேறன்மேவல்
சுவவென்பபுள்ளின்மூக்குஞ் சுவர்க்கமுஞ்சுண்டனும்பேர்
குவவென்பதிரட்சிமற்றுங் குவிதலேபெருமைக்கும்பேர்

இ-ள். இவறலென்பது-மறதி-ஆசை-பேரிசைக்கும்பெயர்-இவர்தலென்பது-பறவைமூக்கு-தேவலோகம்-மூஞ்சூறுக்கும்பெயர்-குவவென்பதுதிரண்டவடிவு-குவிதல்-பெருமைக்கும்பெயர்-எ-று. (௩)

தவிசென்பகருக்குமெத்தை யிலகடமுப்பேர்தானே
சவிமணிக்கோவைசெவ்வி சாற்றியபனப்பக்காந்தி
நவிரமேமஞ்ஞைபுன்மை நன்மலையுடனேயுச்சி
நவிலல்சொல்லுதல்பண்ணர்போ நவியமேமழுக்கோடாலி

இ-ள், தவிசென்பது-கடுக்கு-மெத்தை-யானைமேற்றவிசுக்கும்பெயர்-சவியென்பது-மணிக்கோவை-செவ்வை-அழகு-ஒளிக்கும்பெயர் நவிரமென்பது-மயில்-புன்மை-மலை-உச்சந்தலைக்கும்பெயர்-நவிலலென்ப

து-சொல்லல்-செய்தலுக்கும்பெயர்-நவியமென்பது-மழுப்படை-கோடாலிக்கும்பெயர்-எ-று. (௪)

கவுசிகன்விளக்குத்தண்டோர் பண்பட்டுக்கடியகோட்டான்
சவுரியேதிருமால்கள்வன் சனியமனிவையநாற்பேர்
மவுலியேமுடிகோடீரம் வட்கலென்பதுநாண்கேடாம்
கவலைசெந்தினையோர்வல்லி கவர்வழிதுன்பநாற்பேர்

இ-ள். கவுசிகமென்பது-விளக்குத்தண்டு-ஓர்பண்-பட்டுச்சீலைகோட்டானுக்கும்பெயர்-சவுரியென்பது-திருமால்-கள்வன் -சனிஇயமனுக்கும்பெயர்-மவுலியென்பது-கிரீடம்-சடைக்கும்பெயர் - வட்கலென்பது-நாணம்-கெடுதலுக்கும்பெயர்-கவலையென்பது-கம்பு - ஓர்கொடிகவர்வழி-துன்பத்துக்கும்பெயர்-எ-று, (௫)

சேவகம்வீரம்யானைத் துயிலிடந்துயிலுஞ்செப்பும்
சீவனியோர்மருந்து செவ்வழித்திறத்தோராசை
ஆவணம்புணர்தம்வீதி யங்காடியுரிமைநாற்பேர்
நீவியேதுடைத்தலாடை நெருங்குகொய்சகமுப்பேரே

இ-ள சேவகமென்பது-வீரம்-யானைத்துயிலிடம்-நித்திரைக்கும்பெயர்-சீவனியென்பது-ஓர்மருந்து - செவ்வழித்திறத்திேனாராசைக்கும்பெயர்-ஆவணமென்பது-புனர்பூசநட்சத்திரம் -தெருகடைவீதி-உமைக்கும்பெயர்-நீவியென்பது-துடைத்தல்- வஸ்திரம் - கொய்சகத்திற்கும்பெயர்-எ-று. (௬)

உவனகமதிலோர்பக்க மூருணிபுள்ளமுள்ளில்
கவடென்பகப்பியானைக் கழுத்திடுபாசைக்கும்பேர்
சிவையுமைமாவோர்கொல்வ னுலைமுகந்திரியுமோரி
கவையேயாயிமியங்காடு கவர்வழியெள்ளிளங்காய்

இ-ள், உவனகமெனபது-மதில்-ஓர்பக்கம்-குளம்-பள்ளம்-அந்தப்புரத்துக்கும்பெயர்-கவடென்பது-மரக்கொம்பு-யானைக்கழுத்திற் கட்டுங்கயிறறுக்கும்பெயா-சிவையென்பது-பார்வதி-மாவோர் கொல்லனுலைமுகம-நரிக்கும்பெயர்-கவையென்பது-ஆயிலியநட்சத்திரம் - காடுகவர்வழி-எள்ளிளங்காய்க்கும்பெயர்-எ-று. (௭)

சிவப்பென்பசினமுஞ்செம்மை யுடன்சினக்குறிப்புமுப்பேர்
உவப்பென்பமகிழ்ச்சிமேடாம் ஒழுக்கமேவழியாசாரம்
தெவிட்டலேயடைத்தல்கான்ற னிறைதலுமொழியுஞ்செப்பும்
துவககேதோல்பிணக்கிரண்டாம் சூழலேயிடம்விசாரம

இ-ள், சிவப்பென்பது-கோபம்-சிவப்பு-கோபக்குறிப்புக்கும்பெயர் உவப்பென்பது-களிப்பு-மேட்டுக்குமபெயர்- ஒழுக்கமென்பது-வழிஒழுக்கத்திற்குமபெயர்-தெவிட்டலென்பது - அடைத்தல்-உமிழ்தல்-நிறைத்தல்-சத்தத்திற்கும்பெயர்-துவக்கென்பது-கோல்-பிணக்கும்பெயர்-சூழலென்பது-இடம்-ஆராய்தலுக்கும்பெயர்-எ-று. (௮)

சேவலோாவலோடு சேறுபுள்ளாண்முப்பேரே
கேவலந்தனிமைமுத்தி கீரமென்பதுபால்கிள்ளை

பூவைசாரிகைகாயாவாம் புலிசிங்கமுழுவைசாங்தே
வாவலேதுருஞ்சிபுள்ளுந் தாவலும்வகுக்கலாமே

இ-ள், சேவலென்பது-காவல்-சேறு-மயிலொழிந்த பறவையாணுக்கும்பெயர்-கேவலமென்பது-தனிமை-மோட்சத்திற்கும்பெயர் - கீரமென்பது-பால்-கிளிக்கும்பெயர்-பூவையென்பது-நாகணவாய்ப்புள்காயாமரத்திற்கும்பெயர்- புலியென்பது-சிங்கம்-புலி - நால்வகைச்சாங்கிலொன்றுக்கும்பெயர்-வாவலென்பது-வெளவால்- தாண்டலுக்கும்பெயர்-எ-று. ( )

சுவல்பிடற்றோண்மேன்மேடு தூகதக்குசைநாற்பேரோ
கடுந்திபுலவன்சுங்கன் கழிபென்பமிகுதிகாயம்
நவிரோயாண்மயிர்பண்வாளாம் நாஞ்சிலேநதிரங்கலப்பை
கவிதையேகுடைகொடைப்பேர் கடிப்பங்காதணிபூண்செப்பாம்

இ-ள், சுவலென்பது பிடரி-தோண்மேல்மேடு - குதிரைமயிருக்கும்பெயர்-கவியென்பது-குரங்கு-புலவன்-சுக்கிரனுக்கும்பெயர்-கழியென்பது-மிகுதி-கழிக்கும்பெயர்-நவிரென்பது-ஆண்மயிர்-மருதயாழ்த்திறம்-வாளுக்கும்பெயர்-நாஞ்சிலென்பது-மதிலுறுப்பு கலப்பைக்கும்பெயர்-கவிகையென்பது-குடை-கொடைக்கும்பெயர் -கடிப்பமென்பது-காதணி-ஆபரணச்செப்புக்கும்பெயர்-எ-று. (௰)

மாவண்டுபெருமைபிண்டி வாசிகூப்பிடல்வெருத்தல்
காவுறுவிலங்குசெல்வங் கருநிறல்கமலைபத்தாம்
கோவிழிபசுநீர்திக்குக் குலிசம்வெண்கிரணம்பூமி
ஏவுரைசுவர்க்கம்வேந்த னிரங்கல்வெற்பீரேழுமே

இ-ள், மாவென்பது-வண்டு-பெருமை-நென்மா-குதிரை-அழைத்தல் வெறுப்புவிலங்கின்போது.செல்வம்-கருநிலம்- திருமகளுக்கும்பெயர் கோவென்பது-கண்-பசுநீர்திசைவச்சிராயுதம்-ஆகாயம்கிரணம்பூமி அம்பு-சொல்-தேவலோகம்-அரசன்-இரங்கல்-மலைக்கும்பெயர்-எ-று. (கக)

ஆவியேவாவுகாற்ற மாருயிர்புகைமூச்சைம்பேர்
கூவிரந்தேர்தோமொட்டாம் குவடுநீண்மலைவெற்புச்சி
காவிபேகுவளைகாவிக் கல்லொடுகள்ளுமுப்பேர்
நாவிதன்மஞ்சிகன்கார்த் திகைபூசநாளுமாமே

இ-ள், ஆவியென்பது-குளம்-வாசனை-உயிர்ப்புகை - உயிர்ப்புக்கும்பெயர்-கூவிரமென்பது-தேர்-தேர்க்கொடிஞ்சிக்கும்பெயர்- வகுடென்பது-மலையினுச்சிக்கும்பெயர்-காவியென்பது-கருங்குவளை - காவிக்கல்கள்ளுக்கும்பெயர்-நாவிதனென்பது- அம்பட்டன் கார்த்திகை நட்சத்திரம் பூசநட்சத்திரத்திற்கும்பெயர்-எ-று, (உ௰)

ஆவென்பதிரங்கம்பெற்ற மச்சாவோடிசைவியப்பாம்
காவென்பதுலாம்பூஞ்சோலை காத்தரேட்சுமைநாற்பேரே
பாவென்பபனுவனூற்பா பரவுதல்பாப்புமாகும்
தாவென்பபகைவருத்தந் தாண்டுதல்வலிகேடைம்பேர்

இ-ள். ஆவென்பது-இரக்கம்-பசு-ஆச்சாமரம் இசை - அதியசத்துக்கும்பெயர்-காவென்பது-துலை-சோலை-இரட்சித்தல் - தோட்சுமைக்கும் பெயர்-பாவென்பது பஞ்சிநூல்-வெண்பாமுதலியபா பரவுதல் - பரப்புக்கும்பெயர் தாவென்பது-பகை-துன்பம-தாண்டுதல் வலிமைகெடுதலுக்கும்பெயர்-எ-று. (கங)

கவ்வையேபழிச்சோறுன்பங் கள்ளொலியெள்ளிளங்காய்
பவ்வமேகுமிரிவாரி பருமாக்கணுவுவாயாம்
தவ்வைமுன்பிறந்தாளோடு தாயுமூதேவியும்பேர்
நவ்வியேதேநணிமானும் நன்றெனப்பெருமைநன்மை

இ-ள், கவ்வையென்பது-பழிச்சொல்-வருத்தம்-கள்-சந்தம்-எள்ளிளங்காய்க்கும்பெயர்- பவ்வமென்பது-நீர்க்குமிழி-கடல் - பாக்கணுவு பௌர்ணமிக்கும்பெயர்-தவ்வையென்பது-அக்காள் -தாய்மூதேவிக்கும்பெயர்-நவ்வியென்பது-தோணி -மானுக்கும்பெயர் - நன்றென்பது பெருமை நன்மைக்கும்பெயர்-எ-று. (கச)

அவலேசிற்றுண்டுபள்ள நீர்விலையாகுமுப்பேர்
செவிலிலேவளர்த்தகைத்தாய் முனபிறந்தவளுஞ்செப்பும்
கவுடமோர்கொடியோர்தேச மிருபெயர்கழறலாமே
சுவடிவச்சிராங்கியோரெண் சுபமென்பதழகுவெண்மை

இ-ள், அவலென்பது-சிற்றுண்டி-பள்ளம்-குள்ளத்திற்கும்பெயர்செவிலியென்பது-செவிலித்தாய் அக்காளுக்கும்பெயர் - கவுடமென்பது ஓர்கொடி-ஒர்தேசத்துக்கும்பெயர்-சுவடென்பது வச்சிராங்கி ஓர்நெல்லுக்கும்பெயர் சுபமென்பது அழகு-தெண்மைக்கும்பெயர்-எ-று, ()

பவமென்பசனனம்பர்வம் பாவந்தான்வினைதியானம்
சவுரியங்களவுவீரம் தண்மைதான்குளிர்ச்சிதாழ்வு
அவமொருதானியப்பே ரென்பநெல்விற்குமப்பேர்
யவனர்சோகர்கண்ணுளர் சித்திரக்காரரென்ப

இ-ள் பவமென்பது-பிறம்பு - பாவத்திற்கும்பெயர் பாவமென்பது தீவினை தியானத்திற்கும்பெயர் சவுரியென்பது களவு - வீரத்திற்கும் பெயர் தண்மையென்பது - குளிர்ச்சி-தாழ்விற்கும்பெயர் அவமென்பது-ஓாவகைக்கோதுமை நெல்விற்கும்பெயர் யவனரென்பது - சோனகர் கண்ணுளர்-சித்திரக்காரருக்கும்பெயர் -எ-று. (கரு)

ஆவரணந்தான்சட்டை தடைமறைவாணவாடை
ஏவலேவியங்கோலென்ப வெய்தியவறுமைக்கும்பேர்

ஓவியர்சிற்பநூலோ ரொடுசித்திரக்காரரும்பேர்
ஓவிரக்கச்சொன்னீக்க மோடுநீர்தகைகபாடம்

இ-ள். ஆவரணமென்பது-சட்டை தடுத்தல்-மறைவு-கோட்டைவ ஸ்திரத்துக்கும்பெயர்-ஏவலென்பது-வியங்கோல் - தரித்திரத்துக்கும் பெயர்-ஓவியரென்பது-சிற்பசாரியர்-சித்திரக்காருக்கும்பெயர்-ஓவென் பது இரக்கச்சொல் நீங்குதல் மடையடைக்கும்-கதவிற்கும்பெயர். ()

அவ்வையேதாயின்பேரு மவ்வையோடிருபோாமே
செவ்வையோர்பொழுதினோடு செப்பியபருவமாரும்
தெவ்தமர்பகையிரண்டாம் தீவினைகொடுமைபாவம்
சைவமோர்புராணமீசன் சமயத்தின்விகற்பமாமே

இ-ள், அவ்வையென்பது-தாய்-ஔவைக்கும்பெயர் - செவ்வியென் பது-அழகு-காலம்-பருவத்திற்கும்பெயர்-தெவ்வையென்பது -யுத்தம் பகைக்கும்பெயர்-தீவினையென்பது கொடுமை - பாவத்திற்கும்பெயர்- சைவமென்பது-ஓர்புராணம் சிவசமயத்தின்-வேறுபாட்டிற்கும்பெயர்.

வகரவெதுகை-முற்றிற்று.

---

## ழகரவெதுகை.

---

விழவென்பமிதுனராசி வியங்குமுற்சவமுமாகும்
கழையென்பபுனர்தமூங்கில் கரும்பெனவிரும்புமுப்பேர்
கழல்கழங்கொடுசெரும்புக் காலணிகாலிந்நாற்பேர்
கிழமைமூப்புரிமைபண்பாம் கிழிநிதிப்பொதிகிற்றுமே

இ-ள். விழவென்பது மிதுனவிராசி-திருவிழாவிற்கும்பெயர் கழை யென்பது புனர்பூசநட்சத்திரம் மூங்கில் கரும்புக்கும்பெயர் கழலென் பது கழற்காய்செருப்பு காலணிகாலுக்கும்பெயர் - கிழமையென்பது- முதுமை உரிமை குணத்திற்கும்பெயர் கிழியென்பது நிதிமுடிப்பு கி ற்றுக்கும்பெயர்-எ-று. (௧)

சூழியேசுனையும்வெய்ய தும்பியின்முகப்படாமும்
பாழியேவழிவிலங்கின் படுக்கையூர்பற்றிலாரூர்
நாழியேயளக்குநாழி நாழிகைபூரட்டாதி
ஆழிமோதிரமேநேமி யலைகடல்கரையேவட்டம்

இ-ள். சூழியென்பது சுனை யானைமுகப்படாத்திற்கும்பெயர் பாழி யென்பது வலிமை மிருகத்தின் படுக்கை ஊர்-பகைவருக்கும்பெயர் நாழியென்பது அளிக்குநாழி நாழிகை பூரட்டாதி நட்சத்திரத்துக் கும்பெயர் ஆழியென்பது மோதிரம சக்கராயுதம் கடல் கடற்கரை வட்டவடிவிற்கும்பெயர்-எ-று, (௨)

இழுமெனலோசையென்ப வினிமையுமியம்புமப்பேர்
விழுமமேசிறப்புசீர்மை யிடும்பையும்விதித்தபேரோ
தொழுவென்பதுழலைதானே யிரேவதிநாளுஞ்சொல்லும்
செழுமையேவளங்கொழுப்பாம் தேனென்பாரவும்வண்டு

இ-ள். இழுமெனலென்பது-அங்கரணவோசை இனிமைக்கும்பெயர்-விழுமமென்பது சிறப்புசீர்மை துன்பத்திற்கும்பெயர்-தொழுவென்பது-தொழுமரம் இரேவதி-நட்சத்திரத்துக்கும்பெயர்-செழுமையென்பது வளமை கொழுப்புக்கும்பெயர் தேனென்பது-வண்டுக்கும்பெயர்-எ-று. (௩)

கழுபேய்பரண்வண்டென்ப கயவுகீழ்பெருமைமேன்மை
அழுவமேபரப்புகாடும் அழுங்கலேயிரங்கல்கேடாம்
கழுமல்பற்றுமயக்காம் காதலேயாசைகோறல்
கழிதலென்பதுவேசாதல் கடத்திடன்மிகுதிமுப்பேர்

இ-ள் கழுதென்பது பிசாசம் பரண்வண்டுக்கும்பெயர் கயவென்பது கீழ்மை பெருமை மேன்மைக்கும்பெயர் அழுவமெனபது பரப்பு காட்டிற்கும்பெயர்-அழுங்கலென்பது-இரங்கல்-கேட்டிற்கும்பெயர் - கழுமலென்பது பற்றுதல்-மயக்கத்திற்கும்பெயர்-காதலென்பது-ஆசை- கொல்லுதலுக்கும்பெயர்-கழிதலென்பது-சாதல்-கடத்தல்-மிகுதிக்கும்பெயர்-எ-று. (௪)

மாழைபொன்னுலோகக்கட்டி மடைமையோர்பளிமாவோலை
கூழையேசிறகுமாதர் கூந்தல்வெம்படையுறுப்பாம்
தாழைகேதகைதெங்காகும் சாகினிசேம்புகீரை
ஊழ்முறைவெயில்வகைப்பேர் ஊசியேசூசியாணி

இ-ள் மாழையென்பது பொன்-உலோகக்கட்டி-அறிவின்மை-அழகு-புளிமா-ஓலைக்கும்பெயர் கூழையென்பது-சிறகுபெண்மயிர்படையறுப்புக்கும்பெயர்-தாழையென்பது தென்னமரத்திற்கும்பெயர் சாகினியென்பது - சேம்பு-சிறுகீரைக்கும்பெயர்-ஊழென்பது-முறைமைவெயில்-பகைக்கும்பெயர்-ஊசியென்பது-இழைவாங்கி-எழுத்தாணிக்கும்பெயர்-எ-று. (௫)

உழையென்பதிடமான்யாழி லோர்நரப்பிற்கும்பேராம்
குழையென்பதளிர்துவாரம் குண்டலஞ்சேறுநாற்போ
விழையென்பபுணர்ச்சிகாதல் வெறுக்கையின்பதுபொன்செல்
வழிமரபிடம்பின்மார்க்கம் வழங்கலேகொடையுலாவல்

இ-ள் உழையென்பது-இடம்-மான்-யாழ்னோர்நரம்பிற்கும்பெயர் - குழையென்பது-தளிர்-துளையுடைப்பொருள் குண்டலம் சேற்றிற்கும்பெயர்-விழையென்பது-புணர்தல்-ஆசைக்கும்பெயர்-வெறுக்கையென்பது பொன்-செல்வத்திற்கும்பெயர்-வழியென்பது-பழமை-இடம்பின்வழிக்கும்பெயர் - வழங்கலென்பது-கொடுத்தல்-உலாவலுக்கும்பெயர்-எ-று. (௬)

ஈழம்பொன்கள்ளோர்தேசம் எல்லையேயளவைவெய்யோன்
மேழகங்கவசமாடம் வேளாண்மைகொடையேமெய்ம்மை
காழியர்வண்ணாருப்பு வாணிகரிருபேர்காட்டும்
வேழவேகரும்பியானை சொருக்கச்சிவேணுநாற்பேர்

இ-ள், ஈழமென்பது-பொன்-கள்-சிங்களதேசத்திற்கும்பெயர்-எல்லையென்பது-அளவு-சூரியனுக்கும்பெயர்-மேழகமென்பது-கவசம-ஆட்டிற்கும்பெயர் வேளாண்மையென்பது-கொடுத்தல்-உண்மைக்கும்பெயர் - காழியென்பது-வண்ணார்-உப்பு-வாணிகருக்கும்பெயர்-வேழமென்பது-கரும்பு- யானை-கொறுக்கை-மூங்கிலுக்கும்பெயர்-எ-று, (௭)

கூழென்பதுணவும்பொன்னும் பயிரொன்றுங்கூறுமுப்பேர்
காழென்பமணியின்கோவை கற்பால்சேகுவித்தாம்
யாழென்பமிதுனவிணை யிரலைநாளாதிரைப்பேர்
கீழென்பதிடங்கீழ்ச்சாதி கீழ்த்திசைகயவைநாற்பேர்

இ-ள், கூழென்பது-உணவு-பொன்-பயிருக்கும்பெயர்-காழென்பது மணிக்கோவை-பருக்கைக்கல்-மாவயிரம்-விதைக்கும்பெயர்-யாழென்பது-மிதுனவிராசி-விணை அச்சுவினிநட்சத்திரம்-திருவாதிரை நட்சத்திரத்துக்கும் பெயர்-கீழென்பது-இடம்-ஈனசாதி-கிழக்குகீழ்மைக்கும்பெயர்-எ-று. (௮)

கோழியேகுருகோரூராம் குய்யமேமறைவுயோனி
மூழியேவாவிசோறு டகைப்பையுமொழியுமுப்பேர்
மூழையேயகப்பைசோறும் முதஞ்சுள்கொடுவிசாத்தி
நூழிலேகோறல்யானை நுண்கொடிகொடிக்கத்தான்பேர்

இ-ள், கோழியென்பது-கோழி-எறையூருக்கும்பெயர்-குய்யமென்பது - மறைவு-பெண்குறிக்கும்பெயர்-மூழியென்பது-குளம்-சோறு அகப்பைக்கும்பெயர்-மூழையென்பது- அகப்பை-சோற்றிக்கும்பெயர் - நூழிலென்பதுகொல்லல் யானைபடர்கொடி-கொடிக்கத்தானுக்கும்பெயர்-எ-று. (௯)

தொழுதிபுள்ளொலிகூட்டப்பேர் தொறுநிரையடிமைகூட்டம்
கெழுவுதன்மயக்கம்பற்றும் கீலாலங்கனநீர்காடி
குழறூளையுடைப்பொருள்பெண் மயிரிசைக்குழன்முப்பேரோ
அழிவென்பவீதல்கோடாம் அவிநெய்சோறமருண்டி

இ-ள் தொழுதியென்பது-பறவையினொலி-கூட்டத்திற்கும்பெயர்- கெழுவுதலென்பது-மயக்கம்-பற்றுக்கும்பெயர்-கீலாலமென்பது இரத்தம்-நீர்-காடிக்கும்பெயர்-குழலென்பது-உட்டுளைப்பொருள்-கூந்தல்-வேல்குழலுக்கும்பெயர்-அழுவென்பது-சாதல்-கேட்டிற்கும்பெயர்- அவியென்பது - நெய்-சோறு தேவருணவிற்கும்பெயர்-எ-று, (௰)

ழகரவெதுகை-முற்றிற்று.



# ளகரவெதுகை.

---

குளநுதல்கரும்பின்கட்டி குட்டமுமிட்டநாமம்
களமமர்க்களமேகண்டங் களாவிடங்கறும்பேவில்லாள்
வளமைமாட்சிமைகொழுப்பாம் வாருணங்கடலுமேற்கும்
விளவென்பகமர்விளாவாம் விம்மலேக்குதலொலித்தல்

இ-ள் குளமென்பது-நெற்றி-வெல்லம் - குளத்திற்கும்பெயர் - களமென்று போர்க்களம்-கழுத்து-களாச்செடி நஞ்சு- கறுப்பு-மீனவிக்கும்பெயர் - வளமையென்பது-மாட்சிமை-கொழுப்புக்கும்பெயர் - வாருணமென்பது-கடல்-மேற்குக்கும்பெயர்-வுளவென்பது-வலப்பிளப்பு விளாமரத்திற்கும்பெயர்-விம்மலென்பது-அழுதல்-ஒலித்தலுக்கும்பெயர்-எ-று. (க)

முளரியேவிறகுசெந்தி முண்டகஞ்சிறுமைகாடாம்
விளரென்பகிளமைதானே வெளுப்பொடுகொழுப்புமாகும்
களகமேயானைக்கன்று கமழ்சாந்துகலவைமுப்பேர்
உளர்தலேசிதறலாகுந் தடவலுமுறைக்கற்பாற்றே

இ-ள், முளரியென்பது-விறகு-நெருப்பு-தாமரை-நுண்மை - காட்டிற்கும் பெயா-விளரென்பது-இளமை-வெண்மைகொழுப்புக்கும்பெயா - களமென்பது-யானைக்கன்று- சாந்து-சலவைக்கும்பெயர்-உளர்தலென்பது-சிந்தல்-தடவலுக்கும்பெயர்-எ-று. (உ)

குளிர்மழுநண்டிருத்தல் குளிர்கவண்முழாமீன்றூனை
நளிர்குளிர்பெருமைஞெண்டு நாட்டியசெறிவுநாற்பேர்
ஒளிவட்டந்தான்கண்ணுடி சக்கரமிருபேரோதும்
இளியிசைசிரித்தலெல்லே யிணங்குதலுரித்தற்குமபேர்

இ-ள், குளிரென்பது- மழுப்படை-நண்டு-தங்கல்-குளிர்ச்சி - கவண்குடமுழா-மீனெழுங்கிற்கும்பெயர்-நளிரென்பது-குளிர்ச்சி-பெருமை-நண்டு -செருக்கத்திற்கும்பெயர்-ஒளிவட்டமென்பது-கண்ணுடி- சக்கராயுதத்திற்கும்பெயா இளியென்பது-ஏழிசையிஞென்று-இசித்தல்-இகழ்ச்சிக்குறிப்பு-இணங்குதல்-உரித்தலுக்கும்பெயா-எ-று. (ங)

பளிதமென்றுகர்ப்பூரம் பல்லமென்கணக்குமாகும்
வெளிதனில்வேழத்தப்பம் வெண்பயிர்கயைதறிப்பேர்
களிறென்பவத்தகாளே கறையடிசுறவுபன்றி
ஒளிபிருசுடரோதியே யொளிப்பிடம்புகழுமாமே

இ-ள், பளிதமென்பது-கர்ப்பூரம்-பல்லமேனுமோ-ரெண்ணிறிற்கும்பெயர் வெளிலென்பது-அனில்-யானைத்தறி-தயிர்தடைதறிக்கும்பெயர் - களிறென்பது-அத்தநட்சத்திரம்-யானை-சுரு-பன்றிக்கும்பெயர்- ஒளியென்பது- சூரியர்-சந்திரர்-நெருப்பு-ஒளிப்பிடம்புகழுக்கும்பெயர். (ச)

பாளிதஞ்சோறுகண்ட சருக்கரைகுழம்புபட்டாம்
ஒளியேயானைக்கூட மொழுங்கென்றும்வழங்குநாலே
கோளிதொன்மரமேயத்தி கொள்வோனுங்கொழுஞ்சிக்கும்பேர்
மீளிதிண்ணிபவன்வலிப்பேர் மேன்மகன்பெருமைக்குமபேர்

இ-ள், பாளிதமென்பது-சோறு-கண்டசருக்கரை-குழம்பு- பட்டுச்சீலைக்கும்பெயர்-ஒளியென்பது-யானைக்கூட்டம்-ஒழுங்குக்கும்பெயர் - கோளியென்பது-ஆலமரம்-அத்திமரம்-கொள்வோன்-கொழுஞ்சிமரத்திற்கும்பெயர் - மீளியென்பது-திண்ணியன்-வலிமையுள்ளோன் பெருமைக்கும்பெயர்-எ-று. (ரு)

அளைதயிர்முழைமுற்றுகும் அசனியேயுருறுவச்சிரம்
உளைபரிமீதுகட்டு மயிர்பிறமயிருமோதும்
கிளையென்பதோர்பண்மூங்கில் கேளோடுகிளைத்தலும்பே
ரிளைபுயலிலமைவேலி தலைக்காவலிவைகாற்பேரோ

இ-ள், அளையென்பது-தயிர்-மலைக்குகை-பற்றுக்கும்பெயர் அசனியென்பது-இடி-வச்சிராயுதத்திற்கும்பெயர்-உளையென்பது -குதிரையிற்கட்டுமயிர்-பிறமயிருக்கும்பெயர் கிளையென்பது-எழிசையிளென்று-மூங்கில்-உறவுகிளைத்தலுக்கும்பெயர்-இளையென்பது மேகம் இளமை-வேலி தலைக்காவலுக்கும் பெயர் எ-று, (சூ)

உள்ளவேகினைவுள்ளான்பே ருழப்பென்பவலியுற்சாக
ஞெள்ளலேபள்ளமேன்மை நீண்டவிதிமுப்பேரோ
யெள்ளலேநகையிழிப்பாம் யாமெர்தற்கிரவுசாம
ஞொள்கல்சோம்பிளைத்தலச்சக் குறிப்பென்றுநுவலற்பாலாம்.

இ-ள், உள்ளலென்பது-நினைத்தல்-உள்ளான்குருவிக்கும்பெயர்- உழப்பென்பது-வலிமை-உற்சாகத்திற்கும்பெயர்-ஞெள்ளலென்பது - பள்ளம்-மேன்மை-தெருவிற்கும்பெயர்-யெள்ளலென்பது-நகைப்பு இழிவுக்கும்பெயர்-யாமமென்பது-தென்திசை-இராத்திரிசாமத்திற்கும்பெயர் - ஞொள்கலென்பது-சோம்பல்-இளைத்தல்-அச்சக்குறிப்புக்குப்பெயர்-எ-று, (எ)

வள்ளென்பகாதுகூர்மை வலிவளம்வாளேவாரம்
வெள்ளையேமுசலிசங்கு வெளிறுவெள்ளாடுவெண்பா
கள்வனேமுசுஞெண்டியானை கருநிறத்தவனேசோரன்
பள்ளியூர்சிற்றூர்கோயில் பாயல்கண்படைநீத்தோரூர்

இ-ள் வள்ளென்பது-காது-கூர்-வலிமை-வளமை - வாளாயுதம் வாருக்கும்பெயர்-வெள்ளையென்பது-பலத்திரன்-சங்குவெண்மைவெள்ளாடு - வெண்பாவிற்கும்பெயர்-கள்வனென்பது-முசு-நண்டு-யானைகரியன் திருடனுக்கும்பெயர்-பள்ளியென்பது மருதநிலத்தூர்சிற்றூர்கோயில் மக்கட்படுக்கை நித்திரைமூவரிருப்பிடத்துக்கும்பெயர்-எ-று, (அ)

விளக்கொளிசோதிநாளாம் வேள்வியேமகநாளீத
வளக்கரேபுடவிசேறுப் படங்கடல்கார்த்திகைப்போ
திளைத்தலேயனுபவித்தல் செறிதலேநிறைதன்மூப்பே
ரிளைத்தலேயிளைப்பிரங்க லொன்றாழேயிரவிவெய்யில்

இ-ள். விளக்கென்பது-தீபம்-சோதிகளுக்கும்பெயர்-வேள்வியென்பது-மகநட்சத்திரம்-கொடுத்தலுக்கும்பெயர்- அளக்கரென்பது-பூமி-சேறு-உப்பளம் கடல்கார்த்திகைக்கும்பெயர்-திளைத்தலென்பது அனுபவித்தல் - நெருங்கல்

நிறைதலுக்கும்பெயர்-இளைத்தலென்பதுமெலித்தல்- இரங்கலுக்கும்பெயர்-என்றாழென்பது-சூரியன்-வெயிலுக்கும்பெயர்-எ-று. (௯)

பிள்ளையேவடுகன்காக்கை பெட்டருன்விரும்பல்வேண்டன்
மள்ளரேமள்ளர்வீரர் மறவர்க்குங்குறவர்க்கும்போ
ருள்ளமேமுயற்சிநெஞ்சா முளுற்றிமுக்கொடுதாளாண்மை
வள்ளியேவல்லிசெங்கை வளபுனையிழைமுப்பேரோ

இ-ள், பிள்ளையென்பது-வயிரவன்-காக்கைக்கும்பெயர் - பெட்டலென்பது ஆசை-ஆசைப்பெருக்கத்திற்கும்பெயர்-மள்ளரொன்பது- உழவர்-படைவீரர்-திண்ணியோர்-குறிஞ்சிநிலமாக்களுக்கும்பெயர்-உள்ளமென்பது-முயற்சி-நெஞ்சுக்கும்பெயர்-உளுற்றென்பது-இமுககம் முயற்சிக்கும்பெயர்-வள்ளியென்பது-படர்கொடி-கைவளை-ஆபரணத்திற்கும்பெயர்-எ-று. (௰)

காளமேயூதுகொம்பு கழுநஞ்சுகருமைநாற்பேர்
வேளறுமுகன்காமன்பேர் விபூதியூன்கொடுமைசெல்வங்
கோளிடையூரொன்பான்கோன் கொலைகுணமனம்வலிபொய்கை
ஞாளியேசுணங்கன்கள்ளர் நான்முகனருகன்வேதா

இ-ள் காளமென்பது-ஊதுகொம்பு- கழுமரம்-விடம் - கறுப்புக்கும்பெயர் வேளென்பது-குமரன்-மன்மதனுக்கும்பெயர்-விபூதியென்பது-தசை-பொல்லாங்கு செல்வத்திற்கும்பெயர்-கோளென்பதுயிடையூறு - நவக்கிரகம்-கொலை-குணம்-வலிமை-பொய்கோள்ளுக்கும்பெயர் ஞாளியென்பது-நாய்களுக்கும்பெயர்-நான்முகனென்பது-அருகதேவன் பிரமதேவனுக்கும்பெயர்-எ-று.()

களனென்பமிடறுகோட்டி களர்நிலக்கருமைநாற்பேர்
தளமிலைபடையேசாந்து தாழிபூவிதழேமேடை
யளகமேமாதரோதி யறன்மயிர்க்குழற்சிமுப்பேர்
தளைவிலங்கொடுதொடர்ச்சி தாட்சிலம்பாண்மயிற்பேர்

இ-ள் களனென்பது-கழுத்து-கூட்டம்-களர்நிலம்-கறுப்புக்கும்பெயர்-தளமென்பது-இலை-சேனை-சாந்து-சாடி-பூவிதழ்-உப்பரிகைக்கும்பெயர் - அளகமென்பது-பெண்மயிர்-நீர்-மயிற்சிக்கும்பெயர்-தளையென்பது-விலங்கு-தொடர்பு-காற்சிலம்பு-ஆண்மயிற்கும்பெயர்-எ-று, (௧௨)

புள்ளுவண்டவிட்டம்புட்பேர் புளகஞ்சாப்பணங்குமிழ்ப்பாம்
கள்ளென்பகள்ளகள்ளாங் கனலிதீயிரவிபன்றி
யள்ளுறஞ்செறிவுசாதோ டயில்வலிபற்றிருப்பாம்
வெள்ளமென்மிகுதிமுந்நீர் வேணுவேணுங்கில்வில்வாள்

இ-ள். புள்ளென்பது-வண்டு-அவிட்டநட்சத்திரம்- பறவைக்கும்பெயர்-புளகமென்பது-கண்ணடி-மயிர்-சிலர்த்தலுக்கும்பெயர்-கள்ளென்பது-களவு-கள்ளுக்கும்பெயர்-கனலியென்பது-நெருப்பு-சூரியன் - பன்றிக்கும்பெயர்-அள்ளென்பது-வலிமை-நெருக்கம்-காது-கூர்மை-அள்ளுக்கும்பெயர் - வெள்ளமென்பது-ஓரெண்-மிகுதி-கடலுக்கும்பெயர்-வேணுவென்பதுமூங்கில்வாளாயுதத்திற்கும்பெயர்-எ-று, (௧௩)

வாளென்பதொளிகட்கப்பேர் வல்லரிதளிர்பைங்காயல்
கூளிபேய்தமரோருசு குறள்படைத்தலைவன்கூட்டங்
தோளென்பபுயங்கையாகுஞ் சுந்தரியுமையேசுண்டன்
தோளென்பதனுடநாளே விருச்சிகந்தெருக்காலும்பேர்

இ-ள், வாளென்பது-பிரகாசம்-வாளாயுதத்திற்கும்பெயர்-வலலரியென்பது-தளிர்-பசுங்காய்க்கும்பெயர்-கூளியென்பது-பேய்- உறவு-எருது-குற்றம்-பூதம்படைத்தலைவன்-கூட்டத்திற்கும்பெயர்-தோளென்பது-தோள்கைக்கும்பெயர்-சுந்தரியென்பது-துர்க்கை-மூஞ்சூருக்கும்பெயர் -தேளென்பது-அனுடநட்சத்திரம்-விருச்சிகவிராசி-தேளுக்கும்பெயர்-எ-று. (கச)

அளியென்பகறம்வண்டு மன்பொடுகொடையும்நாற்பே
ரளவையேயெல்லைநாளா மாசாரந்துற்கிமாரி
விளரியேயிளமையாழி லோர்நரம்பியாழ்நீள்வேட்கை
வளமென்பபதவியும்மல் பண்டமும்வனப்புமாகும்

இ-ள், அளியென்பது-கள்-வண்டு-அன்பு-கொடுத்தலுக்கும்பெயர் அளவையென்பது-எல்லை-நாளுக்கும்பெயர்-ஆசாரமென்பது-சீலதூய்மை-பெருமைக்கும்பெயர்-விளரிலென்பதுயிளமை- யாழிகோர்நரம்பு - நெய்தனிலத்தியாழ் ஆசைப்பெருகத்தித்திற்கும்பெயர் வளமென்பது-பதவி-பலபண்டம்-அழகுக்கும்பெயர்-எ-று; (கரு)

வள்ளமேமரக்கால்வட்டில் கடிகைவட்டிற்குமப்பேர்
வள்ளூரம்பசிவிறைச்சி வனைந்தவூன்பொதுவுமாகும்
மள்ளலேநரகஞ்சேறு மம்புநீர்புயல்வேயேவாந்
வெள்ளிலேவிளாப்படைப்பேர் வேலன்வேள்வெறியாட்டாளன்

இ-ள், வள்ளமென்பது-மரக்கால்-வட்டில். நாழிகைவட்டிலுக்கும்பெயர்-கள்ளூரமென்பது-பசுவினிறைச்சி-தசைப்பொதுவிறகும்பெயர் - அள்ளலென்பது-நரகம்-சேற்றிற்கும்பெயர்-அம்பென்பது-நீர்-மேகம்-மூங்கில் - கணைக்கும்பெயர்-வெள்ளிலென்பது-விளாமரம்ஆசந்திக்கும்பெயர்- வேலனென்பது முருகக்கடவுள்-வெறியாட்டாளனுக்கும்பெயர்-எ-று. (கசு)

காளையேயெருதுபாலைக் கதிபனல்லிளமையோன்பேர்
கூளியூர்நண்பர்பூத கணவீரர்கொலைத்திறத்தோர்
கோளடைவட்டமோடு மண்டலிப்பாம்புங்கூறும்
கேள்வியேசெவிகல்விப்பேர் இடங்ககழ்வாவியாமே

இ-ள் காளையென்பது-எருதுபாலைத்தலைவன்-கட்டிளமையோனுக்கும்பெயர்-கூளியென்பது-சினேகிதர்-பூதகணவீரர்-கொலையாளிகட்கும்பெயர்-கோளகையென்பது-வட்டவடிவு-மண்டலிப்பாம்புக்கும்பெயர் - கேள்வியென்பது-காதுகலவிக்கும்பெயர்-இடங்கென்பது அகழி-வாவிக்கும்பெயர்-எ-று. (கஎ)

இளமையேதண்மைகாம மிளமையின்பருவமும்பேர்
ரளரென்பநரகஞ்சேறு மக்காரமபுடவைவெல்லஞ்

கிளரொன்பகிரணத்தோடு மலர்ப்பூந்தாதான்
களரியோர்க்களங்காடென்ப கருமஞ்செய்யிடமுமாமே

இ-ள் இளமையென்பது-தாழ்மை-காமம்-இளமைப்பர்வதத்திற்கும்பெயர் அளறென்பது-நரகம்-சேற்றிற்கும்பெயர்-அக்காரமென்பது புடவை-வெல்லத்துக்கும்பெயர்-கிளரொன்பது - ஒளி- பூந்தாதுக்கும்பெயர் - களரியென்பது போர்செய்யிடம்-காடு-தொழில்-செய்யிடத்துக்கும்பெயர்-எ-று, (கஅ)

ளகரவெதுகை-முற்றிற்று.

ஆக-வெதுகை-கசு-க்குக்-கூடியசெய்யுள்-உஎரு.

---

# றகரவெதுகை.



இறவையேபுட்டிலேணி யென்பகூர்மிகுட்கூர்மை
குறடென்பபலகைதிண்ணை கொண்மூவென்பதுவின்மோ
புறவமோர்புள்ளுங்காடு முல்லைநன்னிலனும்போற்றும்
பறணியேகுறிஞ்சிமுல்லை நிறத்தொடுபுறமுந்தோலும்

இ-ள், இறவையென்பது-கூடை-ஏணிக்கும்பெயர் - கூடென்பது மிகுதி-துணிச்கும்மெயர்-குறடென்பது-பலகை-திண்ணைக்கும்பெயர் கொண்மூவென்பது-ஆகாயம்-மேகத்திற்கும்பெயா-புறவமென்பது-ஓர்பறவை -காடு-முல்லைநிலத்திற்கும்பெயர்-புறணியென்பது குறிஞ்சிநிலம் - முல்லைநிலம்-புறம்-தோலுககும்பெயர்- எ-று. (க)

மறஞ்சினப்பிணக்குக்கூற்று மலைந்தசேகைமுமாகுங்
குறிஞ்சியோரிசையோர்பணணே குறிஞ்சிசெம்முள்ளிக்கும்பேர்
பிறங்கலேமிகுதிவெற்பு நிறைவொலிபெருமையைப்பேர்
குறும்பொறைகுன்றுகாடு குறிஞ்சிநன்னிலத்தூர்முப்பேர்

இ-ள் மறமென்பது-கோபம்-பிணக்குசமன்- வீரத்திற்குப்பெயர் குறிஞ்சியென்பது-ஓசைஓர்பண் குறிஞ்சிநிலம்-செம்முள்ளிக்கும்பெயர் பிறங்கலென்பதுமிகுதிமலைநிறைதல்-ஒலிபெருமைக்கும்பெயர் குறும்பொரதையென்பது-மலை-காடு-குறிஞ்சிநிலததூருக்கும்பெயர்-எ-று. (உ)

தாறுவிற்குதையேயெல்லை தாழ்மரக்குலைமுட்கோலாஞ்
சேறெனப்பகும்பிசாரந் தித்திப்புவிழிவுகள்ளே
யூறென்பதீமைதீண்ட லுயிர்க்கொலையிடையூரென்ப
வேறிடிமுதனுளாகு மிடமமேடெருதுமப்பேர்

இ-ள், தாறென்பது-விற்குதை-அளவு-மாக்குலை-முட்கோலுக்கும் பெயர்-செறென்பது-சோறுசாரம்-தித்திப்பு திருவிழா கள்ளுக்கும்பெயர்-ஊறென்பது-தீமைதொடுத்தல்-கொலை-துன்பத்திற்கும்பெயர் ஏறென்பது-இடி-அச்சுவினிநாள்-இடபம்-எறுதுக்கும்பெயர்- எ-று. (ந)

சிறையேவேறிடமாம்புள்ளின் சிறகொடுசாவலும்பேர்
கறையிறுத்திடலிரத்தங் கறுப்புரல்விடம்பேரைத்தே
முறையென்பகோசமேயூழ் முறைமையிம்முப்பேறென்ப
புறழ்தலைநடுக்கம்வேறு பெயர்தலோடெளிவிடப்பேர்

இ-ள், சிறையென்பது-வேறிடம்பறவையின் சிறகுகாவலுக்கும்பெயர் - கறையென்பது-குடியிறைஉதிரம்கறுப்பு-உரல்நஞ்சுக்கும்பெயர்- மறையென்பது-புத்தகம்-பழமை-முறைமைக்கும்பெயர்-பிறழ்தலென்பது-நடுக்கம்-வேறுகப்போதல்-ஒளிசெயதலுக்கும்பெயர்-எ-று. (ச)

ஏற்றலேகோடலென்ப வெதிர்ந்துபோர்செய்தலும்பே
ராற்றலேபொறைமுயற்சி யதிபமேவலியேஞானந்
தோற்றலேவதிபிறப்புத் தோன்றுதல்புகழேசாத்பேர்
போற்றலேபுகழ்தலோம்பல் புறமென்பமுதுகுவீரம்

இ-ள் ஏற்றலென்பது-கொள்ளல்-எதிர்த்து-போர்செய்தலுக்கும் பெயர்-ஆற்றலென்பது-பொறுத்தல்-முயற்சி -மிகுதி-வலிமை - ஞானத்திற்கும்பெயர்-தோற்றலென்பது-வலிமை-பிறத்தல்-தோன்றுதல் புகழ்ச்சிக்கும்பெயர்-போற்றலென்பது-புகழ்தல்-பாதுகாத்தலுக்கும்பெயர்-புறமென்பது-முதுகு-வீரத்துக்கும்பெயர்-எ-று. (ரு)

ஆற்றமேமறைவுஞ்சோர்வு மவகாசந்தானுமாகுங்
குற்றலேகுறல்பறித்தல் குறையென்பதிளச்சொளோசை
பொற்றென்பதிரக்கமொத்து லெறிதலெத்தன்மைத்தென்றல்
கொற்றியதுர்க்கைநாமங் கோவிளங்கன்றுக்கூறும்

இ-ள், அற்றமென்பது-மறைவு-சோர்வு-சமயத்திற்கும்பெயர் குற்றமென்பது-குற்றல்-பறித்தலுக்கும்பெயர்-குறையென்பது-இடைச்சொல்-ஒலிக்கும்பெயர்-எற்றென்பது-இரக்கச்சொல்-அடித்தல்-எறிதல்- எத்தன்மைத்தென்றலுக்கும்பெயர்-கொற்றியென்பது- துர்க்கை - பசவினிளங்கன்றுக்கும்பெயர்-

உறழ்வென்பபுணர்வுகாலஞ் செறிவிடையீடொப்பைம்பே
குறவியேயெறும்புநீருற் றுலேக்களமுறவுயிர்ப்பேர்
ருறுகணென்பதுவேதுன்ப முறுபயமிடிநோய்காற்பே
ருறுவனேமுனிபுத்தன்பே ருளக்கையேயுரோங்கலோணம்

இ-ள் உறழ்வென்பது-புணர்ச்சி-காலம்-நெருக்கம்-இடைபீடு- உவமைக்கும்பெயர்-உறவியென்பது-எறும்பு-ஊற்று- உலேக்களம்சுற்றம்-உயிருக்கும்பெயர்-உறுகணென்பது- துன்பம் -அச்சம்-சரித்திரம்வியாதிக்கும்பெயர் - உறுவனென்பது-முனிவன்-அருகனுக்கும்பெயர்-உலக்கையென்பது - உலக்கைதிருவோணநட்சத்திரத்துக்கும்பெயர்-எ-று, (எ)

விறப்பென்பசெறிவுநெற்றி வெருவுதல்பொருதனுற்பேர்
பொறுத்தலேபொறைதாங்கற்பேர் புத்திதான்புத்தன்புத்தி
யிறுத்தலேயொடுத்தறங்க வியம்புதன்முப்பேரொன்பு
கருப்பிருள்சினக்குறிப்பாங் கன்றுகைவளைநன்றுமே

இ-ள் விறப்பென்பது-நெருக்கம்-வெற்றி- அஞ்சுதல் புத்தத்திற்கும்பெயர்-பொருத்தலென்பது-பொறுமை-சுமத்தலுக்கும்பெயர்-புந்தியென்பது- புதன்-புத்திக்கும்பெயர்-இறுத்தலென்பது-ஒலித்தல்-தங்கள்சொல்லுதலுக்கும்பெயர்-கறுப்பென்பது-கருமை-கோபக்குறிப்புக்கும்பெயர்-கன்றென்பது-கைவளைகன்றுக்கும்பெயர்-எ-று, (அ)

பொறிமரக்கலமேசெல்வம் பூமகளெந்திரங்கள்
அறிவிலாஞ்சனைபெழுத்தோ -டைம்பொறிவரியொன்பான்பேர்
வெறிவருவுதல்கலக்கம் வெறியாட்டுவட்டநாற்றங்
குறிபேயதருவைகள்ளூ கூறுமோவென்பதாமே

இ-ள், பொறியென்பது-தோணி-ஐஸ்வரியம்-இலக்குமி - சூத்திரம்-அறிவு-அடையாளம்-எழுத்து-ஐம்பொறி-தேமலுக்கும்பெயர் - வெறியென்பது-அஞ்சுதல்-கலக்கம்-தேவர்க்காடுங்கூத்து-வட்டவடிவு-வாசனை-பிரகாசம்-ஆடுகள்-வியாதிக்கும்பெயர்-எ-று. (கூ)

உறைபொருள்மருந்துவாழ்நா ளுணவுவெண்கலமேகாரம்
மெறிபடைக்கலத்தின்கூடே யென்பிறித்திறுபெய்தல்
நறியபாற்பிணையிடச்சொன் னகரநீர்துளியீராறு
அறைமுழைமோதல்பாறை திறைசிற்றின்மொழியாறுமே

இ-ள், உறையென்பது-பொருள்-மருந்து-வாழ்நாள்-உணவு-வெண்கலம்-உறைப்பு-ஆயுதவுறை-ஓரிலக்கக்குறிப்பு-பாலிடுபிணை-இடைச்சொல்-நகரம்-நீர்துளிக்கும்பெயர்- அறையென்பது - மலையினுட்குகை-அறைதல்-பாறை-அலை-சிறுவீடு-சொல்லுக்கும்பெயர்-எ-று. (ய)

இறைசிவன்கடன்வேந்தன்கை யிறையிறுப்பிறைசிறந்தேன்
சிறுமைபுள்ளிறகுதங்கல் சேணவிகூனிறப்பீராறே
யுறையுளென்பதுநாடூரா முறுதியேநன்மைகல்வி
பொறைமலைதுறக்கல்பாரம் பொருசுமைகருப்பம்பூமி

இ-ள், இறையென்பது-சிவன்-கடன்-அரசன் -கையிறைகுடி-யிறைஉயர்ந்தோன்-அற்பம்-பறவையினிறகு-தங்கள்-நலை- கூன்-வீட்டிறப்புக்கும்பெயர்-உறையுளென்பது-நாடு-ஊர்பொதுவுக்கும்பெயர் -உறுதியென்பது-நன்மைவித்தைக்கும்பெயர்-பொறையென்பதுமலைதுறுகல்பாரம்-பொறுமைசுமை-கருப்பம்-பூமிக்கும்பெயர்-எ-று, (கக)

இறும்புதாமரையின்பூவே மலைகுறுங்காடுமேற்கும்
இறும்பூதுதகைமைவெற்போ டதிசயந்தழைதாறென்றும்
கறங்கலேசுழலோசை கதிரொன்பதிரவிசோதி
யறம்புயர்மலைமூலைப்பேர் பாய்மாவேகுதிரைவேங்கை

இ-ள், இறும்பென்பது-தாமரைப்பூமாலை- குறுங்காட்டுக்கும்பெயர் இரும்பூதென்பது-பெருமலை-அதிசயம்-தளிர்-சிறுதூருக்கும்பெயர்-கறங்கலென்பது-சுழலல்-ஒலிக்கும்பெயர்-கதிரென்பது-சூரியன் பிரகாசத்துக்கும்பெயர்-பறம்பென்பது-மலை-மூலைக்கும்பெயர் -பாய்மாவென்பது-குதிரை-புலிக்கும்பெயர்-எ-று. (கஉ)

கூற்றென்பதியமன்சொல்லாங் கோமானேமூத்தோன்பன்றி
நாற்றநாறுதருேற்றன்பேர் நன்றென்பதகலந்தேற்ற
ஊற்றென்பதூன்றுகோலு முறவிபிபிருபோரது
நோற்றலேபொறைதவப்பேர் நுணுக்கென்பதுநுண்மைதேமல்

இ-ள். கூற்றென்பது-நமன்சொல்லுக்கும்பெயர்-கோமானென்பது மூங்கோன்-பன்றிக்கும்பெயர்-நாற்றமென்பது-மணத்தல் - தோன்றுதலுக்கும்பெயர்-நனவென்பது-அகலம்தெளிவுக்கும்பெயர் ஊற்றென்பது-ஊற்றுகோல்-ஊற்றுக்கும்பெயர்-நோற்றலென்பது - பொறுத்தல்-தவத்துக்கும்பெயர்-எ-று. (௧௫)

கற்பமேபிரமன்வாழ்நாள் கற்பகத்தருசுவர்க்கம்
பொற்றென்பதழகினோடு பொலிவுமெய்ப்பனையுமாகும்
பற்பமேபதுமந்துளாம் பழக்கமேதுன்பமோசை
யுற்கைதாரகைதிக்கொள்ளி யுண்டிநாள்புசித்தல்சோறே

இ-ள், கற்பமென்பது-பிரமதேவனாயுள்-கற்பகவிருட்சம்-தேவலோகத்திற்கும்பெயர்-பொற்பென்பது-அழகு-பொலிவு - அலங்காரத்திற்கும்பெயர்-பற்பமென்பது-தாமரை-துகளுக்கும்பெயர் பழக்கமென்பது-துன்பம்-ஒலிக்கும்பெயர்- உற்கையென்பது-வான்மீன் - கடைக்கொள்ளிக்கும்பெயர்-உண்டியென்பது-உண்டல்-சோற்றுக்கும்பெயர்

முற்றல்காழ்க்கோடல்மூப்பு முடிவுடன்வளைத்தற்பேர்
நெற்றியேநுதலின்பேரு நெடும்படைவகுப்புமாகுங்
கொற்றவேன்மைவெற்றி கோவரசியன்முப்பேரே
பெற்றுதல்புடைத்தலோடே யெறிதலுமிருபேராமே.

இ-ள், முற்றலென்பது-வயிரங்கொள்ளல்-முதுமை - முற்றுதல்-வளைத்தலுக்கும்பெயர்-நெற்றியென்பது- நெற்றிவடைவகுப்புக்கும்பெயர்-கொற்றமென்பது-வலிமை-விசயம்-அரசியலும்பெயர்-எற்றுதலென்பது-அடித்தல்-எறிதலுக்கும்பெயர்-எ-று. (௧௬)

அறுகென்பசிங்கமோர்புல் யாளியுமாகுமுப்பேர்
வறிதெனபகருதலேசற் றறியாமைபயனில்வார்த்தை
மறலியேமயக்கங்கூற்று மறலிகண்மறதியினங்
குறளென்பகுறளும்பேயுங் குறுமையுங்கூறுமுப்பேர்

இ-ள். அறுகென்பது-சிங்கம்-ஓர்வகைப்புல்-யாளிக்கும்பெயர் - வறிதென்பது-குறைதல்சிறுமை-அறியாமை-பயனிலாமொழிக்கும்பெயர் மறலியென்பது- மயக்கம்-இயமனுக்கும்பெயர் - மறலியென்பது-கள்மறதி-இருவுக்கும்பெயர்-குறளென்பது-குள்ளம்-பிசாசம்-சிறுமைக்குப்பெயர்-எ-று. (௧௭)

விறலென்பவலிவென்றிப்பேர்விழைந்தோனேநண்பன்வேட்டோ
ஞெறியென்பவிரைவினோடு நடக்கமுமிருபேராமே
நெறிவழிநீதியென்ப நிருமித்தல்படைப்பாராய்தல்
பறைபறைசவளதோடு புறப்புக்கும்புள்ளிற்குமுப்பேர்

இ-ள், விறலென்பது-வல்லமை - வெற்றிக்கும்பெயர் - விழைந்தோனென்பது-சினேகிதன்-கணவனுக்கும்பெயர்-ஞெறியென்பது-சீக்கிரம்-நடக்கத்துக்கும்பெயர்-நெறியென்பது-வழி - நியாயத்திற்கும்பெ

யர்-திருமித்தலென்பது-திருஷ்டித்தல்-ஆராய்தலுக்கும்பெயர் - பறையென்பது-வாச்சியம்-சொல்-பறவையினிற்கும்பெயர்-எ-று, (௧௭)

றகரவெதுகை-முற்றிற்று.

---

ஆக-எதுகை-யின-க்கு-கூடியசெய்யுள்-௨௯௰,

## னகரவெதுகை.

---

மனவுநன்மணிசங்கக்காம் வரைமலைபிறைவேய்மட்டாந்
தனிதனியொப்பின்மைப்பேர் சாந்தமேகனைமையுஞ்சாந்து
முனைபகைநுனிவெறுப்பா முளைவேயங்குரமேபிள்ளை
யினமிருங்கிளையமைச்சா மெழில்வண்ணமிளமைக்கும்பேர்

இ-ள், மனவென்பது-மணிப்பொது-சங்குமணிக்கும்பெயர் - வரையென்பது-மலைகையிறை-மூங்கில்-அளவுக்கும்பெயர் - தனியென்பது தனி-ஒப்பின்மைக்கும்பெயர்-சாந்தமென்பது-பொறுமை சந்தனத்திற்கும்பெயர்-முனையென்பது-பகைநுனி- வெறுப்புக்கும்பெயர்-முளையென்பது-மூங்கில்-முளை-மகனுக்கும்பெயர்-இனமென்பது-சுற்றம்-மந்திரிக்கும்பெயர்-எழிலென்பது-அழகு-இளமைக்கும்பெயர்-எ-று, (௧)

ஆனகம்படகத்தின்பேரா குந்துந்துமியும்பேர்
மானமேயளவிலச்சை விமானமேபெருமைகுற்றம்
பானலேபழனஞ்செய்தல் பாங்கரேயிடம்பக்கப்பேர்
மானலேமயக்கமொப்பாம் வருடமேமழையுமாண்டும்

இ-ள், ஆனகமென்பது-தம்பட்டம்-பேரிகைக்கும்பெயர்-மானமென்பது-அளவு-வெட்கம்-விமானம்-பெருமை- குற்றத்திற்கும்பெயர்-பானலென்பது- வயல்-செய்தலுக்கும்பெயர்-பாங்கரென்பது- இடம்பக்கத்திற்கும்பெயர்-மானலென்பது-மயக்கம்- ஒப்புக்கும்பெயர்-வருடமென்பது-மழை-வருடத்திற்கும்பெயர்-எ-று, (௨)

தானமேமதநீராட்டுந் தருகொடைசுவர்க்கமாற்பேர்
பீனமேபருமைபாசி பேடென்பம்பேடியூரே
நானமேபூசுபூச்சு நான்முக்குளிக்குநீரும்
வானமாகாயமென்ப மழையுலாமரமுமாமே

இ-ள், தானமென்பது-யானைமதம்-நீராடல்-கொடுத்தல்- தேவலோகத்திற்கும்பெயர்-பீனமென்பது-பருமை-பாசிக்கும்பெயர்-பேடென்பது- அலி-ஊருக்கும்பெயர்-நானமென்பது-பூசும்-பூச்சு- கஸ்தூரி-குளிக்கும்பெயர்-வானமென்பது-ஆகாயம்-மழை-உலர்ந்தமரத்திற்கும்பெயர்-எ-று, (௩)

வாளிமேற்கட்டிசேனை வண்டுகிற்கொடிமுப்பேரே
யாணியேமூலநாளுஞ் சேதமுமாதமென்ப
வேணியேபொழியுமற்றை யெனுமிடைச்சொற்றுமப்பே
ரானியம்பொழுதுநாளா மனந்தைபேர்சந்திபூமி

இ-ள், வாளியென்பது-மேற்கட்டி-சேனை- துகிற்கொடிக்குப்பெயர் ஆனியென்பது-மூலநட்சத்திரம்-கேட்டிற்கும்பெயர் - ஏனையென்பது ஒழிவுமற்றையெனுமிடைச்சொல்லுக்கும்பெயர்- ஆனியமென்பதுகாலமநாளுக்குமபெயர்-அனந்தையென்பது - ஓர்சத்தி- பூமிக்கும்பெயர்

முன்னலேகினைவுநெஞ்சா முன்னன்சீக்கிரியோடெண்ணங்
கன்னல்சர்க்கரைகரும்பு காகநாழிகைவட்டிற்பேர்
மன்னஅுத்திரட்டாதிப்பேர் மன்னவன்றானுமாகும்
கின்னரஞ்சீர்ப்புள்யாழாங் கிடக்கைபூதலம்பாயற்பேர்

இ-ள். முன்னலென்பது-நினைப்பு-நெஞ்சக்கும்பெயர்- முன்னமென்பது சீக்கிரமாம் கருத்துக்கும்பெயர்-கன்னலென்பதுசக்கரை-கரும்பு காகநாழிகைவட்டிலுக்கும்பெயர்-மன்னனென்பது-உத்திரட்டாதிநட்சத்திரம் அரசனுக்கும்பெயர்-கின்னரமென்பது-சீர்வாழ்பரவை வீணைக்குமபெயர்-கிடக்கையென்பது-பூமிமக்கட்படுக்கைக்கும்பெயர் (௫)

பின்னையேபின்றைதங்கை பெரியமாற்குரியதேவி
கொன்பயஅலர்மைகாலங் கூறியபெருமைபச்சம்
பொன்னெனப்பவனப்பிருப்பு பூமகள்வியாழநாற்பேர்
மன்னிலைமிதுதிவேந்தே வாழிவாழ்கெனவிடைச்சொல்

இ-ள். பின்னையென்பது-பின்பு-இளையவன் திருமகளுக்கும்பெயர்-கொன்னென்பது-பயனின்மை-பொழுது - பெருமைபயத்திற்கும்பெயர்-பொன்னென்பது-அழகு-இருப்பு-இலக்குமி-பிரகற்பதிக்குமபெயர்-மன்னென்பது-நிலை-மிதுதி-அரசனுக்கும்பெயர்- வாழியென்பது-வாழ்கெனல்-இடைச்சொல்லுக்கும்பெயர்எ-று. (௬)

வன்னியேபிரமசாரி வளர்கிளிசமிசெந்தீயாகு
சென்னிகம்பாணன்சோழன் சிருனியஞ்செமபாகும்
கன்னிபெண்ணழிவிலாமை கட்டிளமைக்கும்பேரே
தென்னிசைவனப்புத்தாழை தெற்கொடுகற்புமாமே

இ-ள். வன்னியென்பது-பிரமசாரி-கிளி-வன்னிமரம் - நெருப்புக்கும்பெயர்-சென்னியென்பது-தலை-இசைபாடுவோன்-சோழனுக்கும்பெயர்-சிருனென்பது-சம்புக்கும்பெயர்-கன்னியென்பது - பெண்-அழிவின்மை-கட்டிளமைக்குமபெயர்-தென்னென்பது-இசை - அழகு-தென்னமரம்-தெற்கு-கற்புக்கும்பெயர்-எ-று, (எ)

குன்றதேதெண்டமாகுங் குறைவொடுசதயமுப்பே
ரன்றிலோர்புள்ளுமூல நாளெனவாமிரண்ட
மன்றகல்வெளியிஞமம் வாசமும்பலவமுப்பேர்
மன்றலேபரிமளம்பர் மலைவுகல்யாணமும்பேர்

இ-ள், குன்றென்பது-மலை-குறைதல்-சதயநட்சத்திரத்திற்குப்பெயர்-அன்றிலென்பது-ஓர்பறவை-மூலநட்சத்திரத்திற்கும்பெயர்-மன்ற

லென்பது-வெளிவாசனை-சபைக்கும்பெயர் - மன்றலென்பது வசனை-விவாகத்திற்கும்பெயர்-எ-று. (௮)

தனமுலைபொன் னான்கன்று சந்தமுத்தனமைம்பேராங்
கனவுநித்திரைமையற்பேர் கலிங்கஞ்சாதகப்புள்ளாடை
கனைசெறிவொலியாமென்ப கவரியேசவரிமேதி
பனுவலேகிளவி நூலாம் படப்பைபூர்ப்புறமேதோட்டம்

இ-ள், தனமென்பது-முலை-பொன்-பசவின்கன்று- சந்தனம்பசுமுதலியமுப்பொருட்கும்பேர்-கனவென்பது-நித்திரைமயக்கத்திற்கும்பெயர்-கலிங்கமென்பது-வானம்பாடி - சீலைக்கும்பெயர் - கனையென்பது நெருக்கம்-ஓசைக்கும்பெயர்-கவரியென்பது-சாமரம்-எருமைக்கும்பெயர்-பனுவலென்பது-சொல்-நூலுக்கும்பெயர்- படைப்பையென்பது நாட்டிற்புறம் தோட்டற்கும்பெயர்-எ-று. (௯)

அனந்தனேசிவன்மால்சேட னலாயுதனருகனேந்தே
யனந்தமேமுடிவிலாமை யாடகம்விண்முப்பேர்
யனங்கமேயிருவாட்சிப்பேர் ராகுமல்லிகைக்குமப்பேர்
தனஞ்செயன்பார்த்தனேசெந் தழலொருசாற்றுமாமே

இ-ள், அனந்தனென்பது-சிவன்-திருமால்பூமிதாங்கும்பாம்பு பலபத்திரன்-அரனுக்கும்பெயர்-அனந்தமென்பது-அளவின்மை-பொன்-ஆகாயத்துக்கும்பெயர்-அனங்கமென்பது-இருவாட்சிமல்லிகைக்கும்பெயர்-தனஞ்சயனென்பது-அருச்சுனன்-நெருப்பு -தசவாயுவிலொன்றுக்கும்பெயர்-எ-று, (௰)

இதற்குமேற்கோள்

அனந்தனேசிவன்மாய னருகனனந்தனொடு பலதேவனைம்பேரோ அனந்தமென்பது-முடிவிலாமையும்விண்ணொடுபொன்னும்விதிக்கு முப்பெயரோ அனங்கமல்லிகையு மிருவாட்சியுமாம் தனஞ்செயனென்ப தோர்காற்றுந்தீயுமருச்சுனனெனவுவறைவுமுப்பெயரோ.

சானகிசீதைமூங்கி றனுவென்பதுடல்வில்லற்பஞ்
சானுலேமலைமுழந்தாண் மடப்பக்கந்தானுமாகுஞ்
சோணையேயோணநாளும் விடாமழைசொரிதலும்பேர்
கானலேமலைச்சார்சோலை கடற்கரைச்சோலைபேய்த்தோர்

இ-ள். சானகியென்பது-சீதைமூங்கிலுக்கும்பெயர் - தனுவென்பது உடம்பு-வில்-சிறுமைக்கும்பெயர்-சானுவென்பது-மலைமுழங்கால்-மலைச்சாரலுக்கும்பெயர்-சோணையென்பது-திருவோணநாள்-விடாதுபெய்மழைக்குமபெயர்-கானலென்பது-மலைச்சார்சோலை-கடற்கரைச்சோலைதானலுக்குமபெயர்-எ-று. (௧௧)

இதற்குமேற்கோள்

சானகிசீதையுமூங்கிலுமாகும் தனுவேவில்லுமுடலு மோசையு நுட்பமுமெனவுமொழியுமுப்பெயர் சானுமலையுமலையின் சாரலுமுழந் தாண்மனவுமொழிவுமுப்பெயரோ சோணையென்பது-விடாதுபெய்மழை

யுந்திருவோணமு மேனச்செப்புமிருபெயர் கானலேயாதித்த கிரணமு மலைச்சாரலிற் கடற்கரையிற்சோலையும் பேய்த்தேருடனுப்பளமுமைப்பெயரே (கக)

வானென்பவிசும்புமேக மழையொடுபெருமைநாற்பேர்
தானையேசேனைபாடை படைக்கலந்தானுமாகும்
கானந்தேரிசையேபேழை காடுகற்பாடியைம்பே
ரேனலேசெந்திணைப்பேர் திணைப்புனமென்றுமாமே

இ-ள், வானென்பது-ஆகாயம்-மேகம் மழை -பெருமைக்கும்பெயர்- தானையென்பது-சேனை-வஸ்திரம்-ஆயுதப்பொதுவிற்கும்பெயர்- கானமென்பது-தேர்-இ-ம்-அறிவிலிகாடு-வானம் பாடிக்கும்பெயர் - ஏனலென்பது-செந்திணை-திணைப்புனத்திற்கும்பெயர்-எ-று. (கஉ)

இதற்குமேற்கோள்

வானேபெருமையுமழையும் புயலும் விண்ணும்முந்நான்குமேவுமைப்பெயரே, தானையேபொருபடையுந்துகிலாயுதமெனவு மறையுமுப்பெயரே, கானமென்பதுவேயிசையும்வானம்பாடியும் பேழையுந்தேருமென்றப்பேர். ஏனல்செந்திணையும் பைந்திணையுந் திணைப்புனமு மென்றேயோற்றுமுப்பெயரே,

முனியென்பதியானைக்கன்று முனிவன்வில்லகத்திநாற்பேர்
துனியென்பபுலவிநீட்டந் துன்பநோயாதுகோபம்
பனியென்பநடுக்கந்துன்பம் பயங்குளிரிம்மைப்பேரே
சினையென்பமுட்டைபீளை மரக்கொம்புஞ்செப்புமப்பேர்

இ-ள், முனியென்பது-யானைக்கன்று-தவத்தோன்-வில்-அகத்திக்கும் பெயர்-துனியென்பது-புலவிநீட்டம்-துன்பம்-வியாதி-நதி- கோபத்துக்கும்பெயர்-பனியென்பது-நடுக்கம்-துன்பம்-அச்சம்-குளிர்ச்சி பனிக்கும்பெயர்-சினையென்பது-முட்டை-கர்ப்பம் - மரக்கொம்புக்கும்பெயர்.

இதற்குமேற்கோள்

முனியேயிருடியும்யானைக்கன்றும்வில்லுமகத்தியுமேவுநாற்பெயரே, துனியேதுன்பமுமவ்வநீட்டம்கோபமுநோயுங்குடிகையுமைப்பேர், பனியேயிம்முன்குளிருமச்சமுந்துன்பமுநடுக்கமுஞ்சொல்லாகும்சினையே, முட்டையும்பீளுமுறுப்புமாக்கோடெனவும் மைக்குநாற்பெயரே.

மானேசாரங்கமாவின் பொதுவொடுமகரராசி
கானேநன்மணங்காடென்ப கல்வியூர்க்குருவியாமை
யேனாதிநாவிதன்மந்திரியுந் தந்திரியுமைப்பே
மீனேசித்திராநாளவன்மீன் மயிலைமேவுமப்பேர்

இ-ள் மானென்பது-மான்விலங்கின்பொது-மகரராசிக்கும்பெயர்-கானென்பது-வாசனை-காட்டிற்கும்பெயர்-கல்வியென்பது-ஊர்க்குருவி-ஆமைக்கும்பெயர்-ஏனாதியென்பது- நாவிதன்-மந்திரி-படைத்தலைவனுக்கும் பெயர்-மீனென்பது-சித்திராநட்சத்திரம்-விண்மீன் -மீனுக்கும்பெயர்.

### இதற்குமேற்கோள்

மானேயுழையுமசாரங்கியும்விலங்கின்பொதுவும்விளம்பலாகுங்கானேகாடுமணமுமிருபெயர்கல்லூர்க்குருவியுங்கபாடமுமாகும்எருகிசேனைத்தலைவனுமறவனு மந்திரியொடுகாவிதனுமாகும் மீனேவிண்மீன்சித்திரைநாளொடு மீனுமெனவேவிளம்புமப்பேரே

ஞானமேயறிவுகல்வி நல்லதத்துவநூன்முப்பேர்
யானமேமரக்கலத்தோ டொழிலூர்திவிகற்பிரண்டா
யேனமோலைக்குடைப்பே ரெருழியுமறமுமப்பேர்
மேனியேவடிவமென்ப நிறத்தையும்விளம்பலாமே

இ-ள், ஞானமென்பது-அறிவு-வித்தை - ஞானநூலுக்கும்பெயர்-யானமென்பது-நாவாய்-வாகனவிகற்பத்துக்கும்பெயர்-ஏனமென்பது ஓலைக்குடைபன்றி-பாவத்திற்கும்பெயர்-மேனியென்பது -உருவம்-காந்திக்கும்பெயர்-எ-று, (௧௫)

### இதற்குமேற்கோள்

ஞானந்தானேயறிவுங் கல்வியுந்தத்துவநூலுஞ் சாற்றுமுப்பெயரேயானமறை விடுமூர்தியுந்தோணியும் ஏனந்தானேபன்றியும் பாவமுமோலைக்குடையுமென்றேது முப்பேரோதணியுடம்புநிறமாகும்.

அன்னையேமுன்பிறந்தா டோழிநாயாகுமென்ப
அன்னமோதிமமேசோறு மாகாரமுடனெய்யுண்டி
தன்மையேரியல்பினோடு தன்மையினிடமுஞ்சாற்றும்
பன்னலேநெருக்கம்வார்த்தை பருத்தியின்பேருமாமே

இள் அன்னையென்பது-அக்காள்-தோழி- தாய்க்கும்பெயர் - அன்னமென்பது- அன்னப்புள்-சோற்றுக்கும்பெயர் -ஆகாரமென்பது-உடம்பு-நெய்-உணவுக்கும்பெயர்-தன்மையென்பது-அழகு-குணம் - தன்மையிடத்திற்கும்பெயர்-பன்னலென்பது-நெருக்கம்- சொல்-பருத்திக்கும்பெயர் எ-று, (௧௬)

### இதற்குமேற்கோள்

அன்னைதானே தாயுந்தோழியுமுன்பிறந்தாளு மொழியுமுப்பெயரே அன்னமோர்புள்ளுஞ்சோறுமிருபெயர்-ஆகாரமென்பதானும்வடிவுநெய்யுமெனவே நிகழ்த்துமுப்பெயரே தன்மை - என்பதோரிடமுமழகுமியல்புமெனவேபியம்பலாகும் பன்னலேநெருக்கலுந் தேர்தலும்பருத்தியுஞ்சொல்லுபகருநாற்பெயரே

வனமேநீர்மிகுதிகாடு வளர்சோலைதுளசியிம்
வனுமேமந்திரமோர்நூலா மண்ணைபேயிளமையூமுடன்
புன்னைஎன்பதழகினோடு பொலிவுமரப்பன்னையுமாகும்
மன்னைஎன்பான்னிவீடாம் வதுவையேமணங்கல்யாணம்

இ-ள் வனமென்பது-நீர்-மிருதி-காடு-சோலை-துளசி-சுடுகாட்டுக்கு ம்பெயர்-மணவென்பது-மந்திரம்-ஓர்-தருமநூலுக்கும்பெயர்-மண்ணை என்பது-பிசாசம்-இளமை-அறிவிலானுக்கும்பெயர்-புனைஎன்பது அழகு-பொலிவுஅலங்காரத்திற்கும்பெயர்-மனைஎன்பது இல்லாள்-வீட்டிற்கும்பெயர்-வதுவைஎன்பது வாசனைவிவாகத்திற்கும்பெயர்-எ-று. ()

இதற்குமேற்கோள்

வனமேநீரும்வனப்புமிமமுந்துழாயுமிகுதியுங்காடுஞ் சோலையும்புற்றுமனவேபுகலுமேண்பேரே மனுவோர்த்தருமதாலும்மந்திரமும்மண்ணைதானேயிளமையும்பேயுமறவிலானு மாகுமுப்பெயரேபுனைவுவனைதலுதெழிம்பெலிவுமொம்பெனையெனவு முனைக்கலாகும்மனையேயில்லுமனைவியுமாகும் வதுவையே கலியாணமுநாற்றமும்

அன்வினையொடுபெயர்க்கும் விகுதிசாரியையுமாகும்
மன்னிடுக்கனைத்தலென்ப திருளோசையிருபேர்வைக்கும்
மின்னனவொருசொற்பல்பேர் கியற்கவிமுந்தூற்றுன்பான்
சொன்னவன்குணபத்திரன்றாள் சூடுமண்டலவன்றானே

இ-ள் அன்னென்பது-வினைவிகுதிபெயர்-விகுதிசாரியைக்கும்பெயர்-கனைத்தலென்பது-இருள்-ஒலிருக்கும்பெயர்-எ-று, (கஅ)

இசற்குமேற்கோள்

அன்னேவிகுதியுஞ்சாரியையுமாகும் கனைத்தலிருளு மோசையுங்காட்டும்.

ணகரவெதுகை-முற்றிற்று.

ஆக-வெதுகை-கசுூ-க்குக்-கூடியசெய்யுள்-௩௱கூ.

சூப்பு-க௲க-௩௱ய



பதினோராவதுநிகண்டு

முற்றுப்பெற்றது.



உ

கடவுள் துணை

# பன்னிரண்டாவது நிகண்டு.

## பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி

### காப்பு-விருத்தம்.

சொல்வகையெழுத்தெண்ணெல்லாந் தொல்லைநாளெல்லையாக
நல்வகையாக்குமபிண்டி நான்முகனாளுந்தீமை
வெல்வினைதொடங்கச்செய்து வீடருள்வோன்றாள்போற்றி
பல்வகைப்பெயர்க்கூட்டத்தி லொருபெயர்பகரலுற்றும்

### இதன்பொருள்

சொல்வகை யென்பது- சொல்லும்படி யாகிய வகுப்புக் களையுடைய பெழுத்தெண்ணலாம்-எழுத்து அட்சரங்களும்-எண்-கணிதங்களும்-எல்லாம்-மற்றைய- வெவற்றையும்- தொல்லைநாள்-ஆதிகாலந்தொடங்கி - எல்லையாக இற்றையவரைக்கும்- நல்வகையாக்கும்- நனமையாகச் செய்தருளும்- பிண்டி- அசோக விருட்சத்தி னடியிருக்கும்- நான்முகன்- நான்குதிரு முகங்களை யுடையவனும் நாளும் நாள்தோறும்- தீமைபொல்லாங் காகியவைகளை- வெல்வினை-வெல்லும் படியாகிய-நற்செய்கைகள்- தொடங்கச் செய்து-எங்கட்குவரச்செய்து வீடருள்வோன்- பரமபதங் கொடுப்பவ னுடைய-தாள்போற்றி- அடிகளைவணங்கித் தோத்திரஞ் செய்து-பலவகை- அனேகவகைகளையுடைய பெயர்க்கூட்டத்தில்- பெயர்த்தொகைகளில் ஒருபெயர்-வினையென்றால்- நன்மை யடைந்ததும- தீமையடைந்தது மாகிய-இரண்டு பெயர்கள்-ஒருபெய ராயினாற்போல் இப்படிமூன்று முதலிய தொகை சேர்ந்து-பெயர்பெறும்- பலபெயர்க் கூட்டத் தொருபெயர்த்தொகுதியாய்- பன்னிரண்டாவது நிகண்டை பகரலுற்றும்- சொல்லத்தொடங்கினேமென- இந்நூலாசிரியவர் வழிபடுகடவுள்-வணக்கங்கூறினரென்பதாம்

கருத்துறைஒன்றிற்சேர்ந்தது

### க-மோட்சத்திற்குப்பெயர்

கூறியகூறினுங் குற்றமொன்றிலைபருத்தம்
வேறுளதாயினென்று விதித்தலின்விரித்துமுன்ன

கூறிலாச்சிறப்புவர்க்க முறைத்திவட்பொதுவர்க்கத்தில்
ஏறியவூழுஞ்சொல்வா மேகமேவீடுபேறு

(இ-ள்) கூறிய சொல்லியவைகளைத்தானே-கூறினும்-சொன்னாலும்குற்றம்-வழுவாகியவை-ஒன்றிலை ஒன்றுமில்லை-அருத்தம் பொருள்கள்வேறு- வேறேயொன்று-உளதாயி னென்று-உண்டாகியிருந்தாலென்கின்றதாக- விதித்தலின் சான்றோர்கள் சூத்திரஞ் செய்திருக்கின்றபடியால்- விரித்து ஒவ்வொன்றாகவும்-ஒன்றைப்பல வாகவும்-தெய்வம மக்கள்-விலங்கு-மரம்-இடம்பலபொருள்-செய்யும்வடிவு பண்பு-செயல்-ஒலி-ஒருசொற்பல் பெயர்-இப்படி-விரிவாக-முன்னம் இப்பன்னிரண்டா வதன்-முன்னம்-ஊறிலா- இடையூறில்லாத-சிறப்புவர்க்கம்-சிறப்பாகிய- வருக்கங்களை உரைத்து- சொல்லி- இவன்- இங்கே-பொதுவர்க்கத்திலே-பொதுவாகிய-பலவருக்கங்களில்-ஏறிய- பலகூடியொரு பெயரடையும்-ஊழும்-உறுதிப் பாடாகிய- விஷயாந்தரங்களையும்- சொல்வாம சொல்லுகின்றோம் ஏகமேவீடுபெறு-ஏகம்- வீடுபேறு-என்று மோட்சத்திற்குப் பெயர்-பலபெயர் கட்கும் பொதுவாம்-ஏகமா யிருக்கும்-ஒன்றிற் சேர்ந்தவை-இவை-இனி- இரண்டும்-மூன்று முதலியதொகைகூடின மட்டுஞ் சொல்லுகின்றார்-இரண்டாம்பாட்டு-முதல்-பெரும் பான்மையும்-பொருள் விளங்குதலிற்- கருத்துறை மாத்திரம்- முற்கூறியகாப்பும்-முதலும்-ஆகையால் பதவுரையுங்கூறியது- இரண்டாம பதிப்பின்- முற்றவும்- பதவுரை யாகவும்-பொழிப்புரை யாகவும்- கூறப்படும்- மண்டலபுருடன்-சூடாமணி நிகண்டு- இப்பன்னிரண்டு- சொற்பொருள்களை- நீக்குதலிற்றுவாதசஆதித்தியர்போலும்-இவன்-என்னும்-ணகரம்-டகரமாகத்திரிந்தது

உ-இருமை-வினை-தோற்றஞ்-சுடர்

இருமையேஇன்மையோடு மறுமைநல்வினையினோடு
மருவுதீவினைகளென்ப மற்றிருவினையினும்
இருவகைத்தோற்றமென்றே யிடிஞ்சராசரங்களென்ப
இருசுடர்மதியமற்றை யிரவியென்றியம்பலாமே ‌ ‌ ‌ உ

உ-மரபு-கந்தம்- அறம்பொருள்

இருமரபன்னைதந்தை யெயதியவழியாங்கந்தம்
இருவகைநற்கந்தங்க ளேற்றதுர்க்கந்தமென்ப
இருவகையரங்களென்ப யில்லறந்துறவரங்கள்
இருவகைப்பொருள்கள்கல்வி யேற்றசெல்வங்களாமே ‌ ‌ ‌ ங

உ-கூத்து-கூ-பழம்-பாவபுண்ணியவழக்கம்

இருவகைக்கூத்துந்தானே யியன்றதேசிகமேமார்க்கம்
கருதுமுப்பழங்களின்பேர் கதலிமாபலாவென்றாமே

விரைவொடுசெய்தலேசெய் வித்தலேயுடம்பாடென்ன
வருமுறைபாவமோடு புண்ணியவழக்கமாமே ௪

௩-மும்மை-பொறி-காலம்-செய்கை

மும்மையேயும்மையிம்மே மொழிந்திடுமறுமையென்ப
செம்மையாம்வாக்குக்காயந் திகழ்மனமுப்பொறிப்பேர்
மும்மையாங்காலப்பேரின் மொழியிறப்பெதிர்நிகழ்ச்சி
மும்மையாஞ்செய்கைபண்ணல் முறைகாத்தல்சிதைத்தலாமே

௩-இடம்-நிலம்-குற்றம்-சுடர்

மூன்றிடமென்பதன்மை முன்னிலைபடர்க்கையாகும்
ஆன்றமூந்நிலங்கள்பூமி யந்தரஞ்சுவர்க்கமென்ன
மூன்றுகுற்றங்கள்காம முதிர்சினமயக்கந்தானே
மூன்றுசெஞ்சுடரேதிங்கள் முளைத்தெழுபருதியங்கி ௬

௩-மொழி-வேதத்தி உயிர்த்தி

பழித்திடல்புகழ்தல்மெய்ம்மை பயக்குமும்மொழிப்பேராகுங்
கழிப்பில்வேதத்தின்முத்தி காருகபத்தியத்தோ
டழிப்பிலாத்தெற்கிலங்கி யாகலன்னியமேயென்ப
ஒழிப்பிலாவுயிரிலங்கி யுதரம்விந்துறுசினத்தி ௭

௩-குணம்-சாத்துவிதச்- செய்தல்

ஏற்றசாத்துவிதத்தோடே யிராசதந்தாமதங்கள்
ஆற்றுமுக்குணங்களாகும் வதிற்சாற்றுவிதமேஞானம்
சாற்றிபதவமேமெய்ம்மை சால்புநல்லருளுண்டாதல்
போற்றியவாய்மைபோலும் புலனடங்குதலுமாமே ௮

இராட்சதச்செயல்

தானமேதவமேமற்றத் தருமம்பேணுதலினோடு
ஞானமேகல்விகேள்வி நலனிவைதெரிதருனே
ஈனமொன்றில்லார்வைத்த விராசதகுணங்களென்ப
ஊனமின்முனிவன்மின்னு ளுரைத்திடுமுண்மைதானே ௯

தாமதச்செயல்

தாமதம்நிறைபேருண்டி சாம்புதல்சோம்புமூரி
காமமேநீதிசேடு கண்ணுறக்கம்பொச்சாப்பு
நாமமாஞ்சலமேதஞ்சம் நாட்டலாமிம்முப்பாலும்
ஆமலிவுடனேமற்ற மெலுவொடுகமனுமாமே ௰

ங-தாமம்-உத்தமதானம்

மறுவறுதானமூன்று வகையதிலுத்தமந்தான்
பெறுமுறையோம்பிவைத்துப் பேணியபொருளைத்தானே
குறுகியேபெருகவென்று குறையிரந்தட்கினோர்க்கும
உறுதவர்க்குவந்துதாழ்ந்தே யுபகாரஞ்செய்யலாமே ௰௧

மத்திமதானம்-அதமதானம்

செருப்பில்லார்வற்றைச் சிதடராதுலர்க்குநல்கல்
வாருறுங்கொங்கைநல்லாய் மத்திமதானமென்ப
ஆரலேபுகழ்கண்ணோட்ட மச்சங்கைமாறுமற்றக்
காரணமின்னவெல்லாங் கடைப்படுதானமாமே ௰௨

ங-கடுகு-பலைபுரம்-சூரியர்முதலியவீதி

திரிகடுகுஞ்சுக்கோடு திப்பிலிமிளகுசெப்பும்
திரிபலையென்பதானே திகழ்கறிநெல்லிதான்றி
புரமூன்றுசெம்பொன்வெண்பான் போற்றியகரும்பொன்னென்ப
விரவியமேடமேறு மிதுனமேயருக்கன்வீதி ௰௩

௪-நிலம்-கதி- அங்கம்

முல்லையேகுறிஞ்சிநெய்தல் மொழிந்திடுமருதமென்ப
கல்லநானிலமென்றோது நாற்கதியும்பர்மக்கள்
சொல்லியவிலங்கினோடு நரகர்சாட்ரகமென்ப
வெல்லுமால்யானைத்தேரே வெம்பரிகாலாளாமே ௰௪

இழிச்சொல் வேதம்

குறளைபொய்கடுஞ்சொல்லோடு கூறியபயனில்வார்த்தை
நாறுநுதல்கேட்டிமற்றை நால்வகையிழிச்சொல்லாகும்
மறுவிலாவிலக்கினோடு வருதயித்திரியஞ்சாமம்
அறைதருமதர்வேதங்க ளாமிவையாகநான்கே ௰௫

கேள்வி வழிநிற்றல் அரண் ஆண்குணம்

அறமுதல்நான்குங்கேட்ட லானநாற்கேள்வியாகும்
உறுதியவ்வழியேநிற்ற லொத்தவைவகைகேள்விப்பேர்
செறிகடல்வெற்புநீரே திணிமதிலரணநான்காம்
அறிகொடைநிறைவேயோர்ப்புக் கடைப்பிடிக்குணங்களான்கே

பெண்குணம் புண்ணியத்தோற்றம்

நாணமேமடமேயச்ச நாட்டியபயிர்ப்புநான்கின்
மாணிழைவட்நல்லார்க்கு வைத்தநாற்குணங்களாகும்

பேணியதவமொழுக்கம் பெருங்கொடைகல்விநான்கிற்
பூணுநற்பொருட்டனுன்கும் புண்ணியத்தோற்றமாமே ௰எ

பொன்வகைபூவகை

சொல்லியசாதரூபங் கிளிச்சிறைதுலங்குகின்ற
நல்லவாடகமேசாம்பு நதமிவைநால்வகைப்பொன்
மெல்லியகொடிபூக்கோட்டில் விளங்குபூநீர்ப்பூவேறு
பில்லியபுதற்பூவென்னப் பொருந்துநால்வகையிற்பூவும் ௰கூ

ச-உண்டியவூறுபாடு-உபாயம்

நறைபட்டவண்பதின்ப நக்குவபருகனுன்காம்
எறிதலேகுத்தல்வெட்ட லெய்தனுன்கூறுபாடம்
முறைதயொடுசாமபேத மூந்தியதானதண்டம்
நெறிபடுமுபாயநான்கும் நிருபர்தம்முறைமையாமே ௰கூ

ச-உயிர்த்தோற்றம்புலமையர்

துவமதாங்குடற்போர்வைக்குண் டொடர்புறுமுட்டைதன்னில்
நவையறுநிலத்தில்வேர்வில் நல்லுயிர்த்தோற்றநான்காம்
கவியொடுகமகன்வாதி காசிலாவாக்கியென்ப
புவியின்மேல்நால்வகைதாம் புலமையினியல்புதானே உ௰

ச-கவி-புலமையரியல்பு

திட்டியவாசினேடு மதுரஞ்சித்திரம்வித்தாரம்
பாட்டினில்யாருமெச்சப் பாடுவோன்கவியென்றாகும்
நாட்டியவரும்பொருட்கள் செம்பொருள்நடையதாகக்
காட்டியவிவகரிப்பான் கமகனென்றறையல்வேண்டும் உக

இதுவும் புலமையரியல்பு

ஏதுவுமோற்கோளுந்தா னெடுத்துடன்காட்டியாங்கே
வாதினிற்பிறன்கோளெல்லாம் மறுப்பவன்வாதியென்ப
ஓதியவரம்பொருட்க ளூற்றவின்பங்கள்வீடு
கோதினிற்கேட்கவேட்கக் கூறுவோன்வாக்கியமாமே உஉ

ஆசுகவியியல்பு

கொடுத்திடும்பொருவின்மற்றுக் கூறியவினத்திற்கோட்டி
யடுத்திடுமெப்போதெப்பொ தசைவின்றியாருமெய்ச்ச
வெடுத்தியல்பாகப்பாடு மெவனவனாசுசொல்வான்
வடுப்பிளவனையவொள்கண் மடமொழிவல்லிநல்லாய் உ௩

மதுரம்வியல்பு

பொருளினிற்பொலிவுமற்றும் பொருந்தியசொல்லிற்செல்வம்
தருதொடைவிகற்பந்தான் றுதைந்தமிர்தமூற
வுருவகமுதலாவைத்த தோதியவலங்காரத்தோ
டிருளறவோசைதோன்றி யிருந்ததுமதுரமாமே ௨௬

சித்திரகவி

சொற்றிடுமாலைமாற்றே சுழிகுளமேகபாதங்
குற்றமில்சக்கரத்திற் கூடொழுகூற்றிருக்கை
கற்றிடுமடிமயக்குக் காட்டும்பாவிண்புணாப்போ
டொற்றெழுத்தியாவுந்தீர்ந்த வொருபொருட்பாடினோடும்

இதுவுமது

லத்திரக்காவேமற்ற சித்திரக்காவினாவி
வுத்தரக்குற்றமில்லா வோரெழுத்தினத்திற்பாட்டே
வைத்திடுங்காதைதன்னை மறைப்பதுகரந்துரைப்பார்த்
தைத்தகோமுதரிகூடச் சமிக்கமென்றசைத்தமாட்டும் ௨௬

இதுவுமது.

சருப்ரதோபத்திரங்கள் சார்ந்திடுமெழுத்தினோடு
வருக்கமும்வடநூல்வைத்த வருமுதாரணமுநோக்கி
விரித்திடமிறைத்துவைத்த மிறைக்கவிப்பாட்டுமற்றும்
தெரித்ததுபாடவல்லோன் சித்திரக்கவியென்றாமே ௨௭

வித்தாரகவி

தெரித்தமும்மணிலன்கோறை செப்புபன்மணியின்மாலை
வருத்தந்தீர்மடலையூர்தல் மறத்தொடுகலிவெண்பாவே
யுருத்தபாசாங்கமற்றும் முறுமியலிசைபெச்கூத்தும்
விரித்துறப்பாட்வல்லோன் வித்தாரகவிரென்றாமே ௨௮

௪-சாம்விடுநிலை

வரிசிலையியற்றுவோர்க்கு மற்றுநால்வகையேநிற்றல்
பரவுபைசாசமற்றும் பகர்ந்தவாலிடத்தினோடு
பெருகியமண்டலங்கள் பிரத்தியாலிடமேயாகும்
ஒருகானின்றொருகாறன்னை முடக்கல்பைசாசமோதும் ௨௯

இதுவுமது.

வலப்பதமண்டலித்து வாமபாதந்தான்பிந்து
நிலைப்பெயரேயாலீடம் நின்றமண்டலத்தினாமம்

இலக்கணத்தோடேகூட விருகான்குமண்டலத்துள்
வலப்பதமுந்திபிற்கால் மண்டலம்பிரத்யாலீடம் ௫௰

௫-திணைநிலம் வாசம்.

கோவியவைந்திணைப்பேர் குறிஞ்சியேசெறிந்தமுல்லை
பாலையேநெய்தலோடு பரவியமருதமாமே
ஏலந்தக்கோலமற்றை யிலவங்கத்தொடுசாதிக்காய்
சாலுங்கர்ப்பூரமைந்துஞ் சாற்றியபஞ்சவாசம ௫௧

௫-விரை-அகிற்கூட்டு

சந்தனமகிலினோடு தகரங்குங்குமமேகோட்டம்
இந்தவைந்தொன்றுசொல்லு மெய்தியவிரைகளின்பேர்
உந்துசந்தனங்கர்ப்பூர முடனெரிகாசுசெந்தேன்
அந்தநெல்லந்தானென்ப வகிற்கூட்டோரைந்துந்தாமே ௫௨

௫-குரவர்பாடல்

அரசனேபாத்திபெற்ற வப்பன்தேசிகனேமூத்தோன்
குரவரோரைவரென்று கூறினர்வேறுநூலோர்
ஒருவனேயொருத்திமற்று முரைந்திடிற்பலரேயொன்று
விரவியபலவென்றைநது மேவியபாலதாமே ௫௩

௫-அங்கம்-பாதகம்

பஞ்சாங்கந்திதியேவாரம் பகர்ந்தநாள்யோகத்தோடு
துஞ்சாதகரணமென்ப சூழ்கொலைகளவுபொய்யே
அஞ்சாதகள்ளருந்த லார்குருநிந்தையென்ப
பஞ்சார்மெல்லடிநல்லாய்கேள் பஞ்சபாதகத்தின்பேரே ௫௪

௫-சயனம்மயிர்ப்பால்

மயிர்சசேணமிலவின்பஞ்சு மற்றசெம்பஞ்சுவெண்பஞ்
சயிர்ப்பிலாவன்னத்தூவி யாமபஞ்சசயனத்தின்பே
வியக்கமைம்பால்வகைப்பேர் மேவியமுடியேகொண்டை
குயிற்றியகுழல்பனிச்சை கோலவார்சுருளுங்கூறும்

௯-துர்க்கதி-உணவு

மல்லொடுயூரமற்றை வானரம்வல்லியங்கள்
சொல்லுமால்விடைகளென்ப துரகதபதிகளேந்தாம்
பல்லினாற்கடித்தல்நக்கல் பருகலேவிழுங்கல்மற்று
மெல்லவேசுவைத்தலாகும் வினவிலைந்துணவுதானே ௫௬

௫-வினா-பூதம்

அறியாதான்வினாவல்பின்னறை யறிவொப்புக்காண்டலோடு
குறியுடனையந்தீர்தல் குறித்தவனறிவுகோடல்
கறையறமெய்யவர்க்குக் காட்டலைவகைவினாவாம்
பெருநிலநீர்திகாற்றே பெருவிசும்பைந்தும்பூதம் ௭௫

## ௰௨-வது-பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

சூ-ஈச்சுரன்முகம-ஓசைவேறுபாடு

தலைவனைம்முகங்களாவ சத்தியோசாதம்வாமம்
புலநுகரகோரகேதத் புருடமீசானமென்ப
விலகுதோல்தொளைநரம்போ டேற்றகஞ்சனையேபாடல்
பலபலபேதமாகும் பஞ்சமாசத்தந்தானே ௫௮

ரு- யாகம்தாயார்

தெய்வமேதருமபூதந் தென்புலத்தோர்மணித்தர்
ஐவகைதேள்விமற்றை யவரவர்பேரிதாமே
உய்வகைபாராட்டுந்தா யூட்டுந்தாய்முலைத்தாயகைத்தாய்
செய்வகையறிந்துபோற்றுஞ் செவிலித்தாயைவர்தாயாம் ௫௯

ரு-கைத்தொழில்குற்றம்

இலகியவெண்ணலூசி பெழுதலேயிலையைக்கிள்ளல்
மலர்தொடுத்திடுதல்யாழின வாசினைகையைந்தாகும்
குலவுகொட்டாவிநெட்டை குறுகுறுப்பேமூச்சீட்டே
யலமரலொடுங்கிகட்டு விருதலமெய்யைந்துமாமே ௬௰

ரு-காடுபடுதிரவியம்-கடல்படுதிரவியம்

அரக்குடனிரளிதேனே யாய்மயிற்பீலிநாவி
நெருக்கியகாட்டிலுற்ற நெடுந்திரவியங்களைந்தாந்
திரைக்கடற்படுவவுப்புச் செய்யவெண்பவளம்வெண்முத்
திரைத்தெழுசங்கொக்கோலை யிவ்வைந்துமென்னலாமே ௬௧

ரு-நாடுபடுதிரவியம் நகர்படுதிரவியம்

நெந்நெல்செவ்விளநீர்மற்றுச் சிறுபயறுடனேவாழை
கன்னலில்வைந்துநாட்டிற் கருதியதிரவியப்பேர்
மின்னுகண்ணாடிபித்தன் வெந்திரன்மந்தியாறு
மன்னவன்காரிலைந்தும வருந்திரவியங்களென்ப ௬௨

ரு-வரைபடுதிரவியம்-புலனுகர்ச்சி

சரியொடுரோட்டமற்றைக் காரதிலொடுதக்கோலம்
கரியகுங்குமமைந்தெனப நன்மலைதிரவியப்பேர்
டிறையிலைம்பொறிநுகர்ச்சி சுவையொளியூறேயோசை
யறிவுநாற்றங்களென்ப லடவிவையாகுமன்றே ௬௩

சூ-அந்தணர்தொழில்-அரசர்தொழில்

ஓதலேயோதுவித்த லுடன்வேட்டல்வேட்பித்திட்டல்
ஈதலேயேற்றலாறு மேற்குறந்தணர்தொழிப்பார்
ஓதலேவெட்டலீத லுல்கொம்பல்படைபயிற்றல்
மேதகுபோர்செய்திட்டல் வேந்தர்செய்தொழில்களாறே ௬௪

சூ-அரசியல்-வைசியர்தொழில்

படைகுடிகூழமைச்சும் பற்றியநட்பினோடு
கெடுமதிலரசியற்கு நிகழ்தறியவாறுபேதம்
தொடையறவோதல்வேட்டல் வேளாண்மைவாணிகத்தின்
வுடனிரைகாத்தலோரை யுழலாறும்வைசியர்க்காமே ௭௫

சூ-வேளாளர்தொழில்.

வைசியமூவகையுளார்க்கு வகுத்தமுத்தொழில்களான
பசுவோம்பலபொருளையீட்டல் பாரிலோர்த்தொழிலைச்செய்தல்
அசையவேதியருக்கேவல் குயிலுவத்தொழிலியற்றல்
இசைவில்காருகவினைக ளாக்கல்சூத்திரருக்காற்றே ௭௬

காருகமாவன - குயிலுவமாவன

பட்டுநூல்பருத்திநூலைப் பதனமைத்தாடையாக்கல்
ஒட்டிபேசுமகதலோடே யழைத்தல்காருகத்திற்செய்கை
கொட்டலேயூதலெல்லாங் குயிலுவத்தொழிற்செய்கை
இட்டசாதிகளுக்கன்றே யிறைமுறையமைத்தவாறே ௭௭

சூ-திகிரிமன்னவர்

அரிச்சந்திரனளனேவெற்றி யாமுசுகுந்தனோடு
பொருப்புறப்புகழைவைத்த புருகுச்சன்புரூரவாவே
விரித்தபூந்தாமக்கார்த்த வீரியனென்றின்னோரைத்
தெரித்துமுன்னெடுத்துவைத்த திகிரிமன்னவர்களாறே ௭௮

சூ-வேதாங்கம்-உட்பகை

ஆறங்குமந்திரத்தோ டாம்வியாகரணமற்றும்
வீறியநிகண்டுசந்தோ பிசிதமேநிறுத்தம்வேறு
கூறுஞ்சோதிடமாங்காமக் குரோதமேயுலோபமேகம்
பாறியமதங்களேமாற் சரியமுட்பகையாரென்ப

சூ-தானை-படை-சுவை

ஒத்தவில்வாள்வேல்யானை யுயர்பரிதேரோடாறே
சுத்தமூலங்காண்கூலி துணைக்கைகாடிவையுமாரே
தித்தித்தல்புளித்தல்கூர்த்தல் சேரவேதுவர்த்தல்காழ்த்தல்
கைத்தலையறுசுவைக்குக் காட்டியவபிதானங்கள் ௫௰

சூ-சமயம்

அறுசமயங்களென்ப வானகையாயிதத்தோ
டுறையும்வைசேடிகம்மே லுளலோகாயிதந்தான்

குயிலிமீமாஞ்சமென்று குடித்தலையன்றிநல்ல
நெறியுளவருகமபுத்தம் நீதியென்றேதுமென்றே ௫௨

கூ-நாட்டமைதி- அரசியல்

செல்வமேவிளைவுமிக்க செழுவளஞ்செங்கோலுண்டாய்
நல்குநோய்தறியபில்லாமை யற்றநாட்டைமைதியாகும்
கல்லறமறந்தன்மேலே நாட்டியவப்பொருட்கள்
ஒலலுமனபவ்விநோக்க வுலகியலாறுபேதம் ௫௩

அறநிலையாம்- மறநிலையாம

தந்தமுன்வருணக்காப்பிற் றருப்பொருளாலேபேணல்
அந்தவாரியற்கைதனனி லறநிலையறத்தச்சொல்லும்
மூநதிகலறுத்தல்செஞ்சொற் றதவியல்லோர்ச்செகுத்தல்
வநதலானிறையைமீட்டல் மறநிலையறமென்றாமே ௫௪

அறநிலைப்பொருள்- மறநிலைப்பொருள்

நெறிவழிநின்றுதத்த நிலையினுழன்றழன்று
பெறுபொருளறநிலைக்குப் பேசியமுவமையாகும்
செறநர்தபபொருளுங்குற்றத் தெண்டத்தினபொருளுஞ்சூதின்
மறுகியபொருளுமம மறநிலைப்பொருளின்பேரே ௫௫

அறநிலையின்பம்-மறநிலையின்பம்

கூறமோர்பாநுவநல்ல குலமொத்ததாரத்திவேட்
டாறியவிலலிநத்த லறநிலையினபமாமே
ஏறுதானறழுவலவிலலா விலக்கசெய்திடுதலெல்லா
மாறுடைநெறியிற்கூட்ட மறநிலையினபமாமே ௫௬

கூ-கருப்பூமிக்குரிமை.

வரைவொடுதொழிலேவித்தை வாணிகமுழவேசிற்பம்
உறைசெயுபோகபூம் யொழிவெநதையுரைத்தவாறே
விறைசெறிபொதியவெற்பின குறுமுனிவிரிததுரைத்தான்
கருமபூம்யெனும்பேர்பின் கணடதுகாணுரேனோர் ௫௭

கூ-போகபூமி

விதியுளபதினாறுண்டு மேவியபன்னிரண்டு
பதியொடுமனைவிபோலப் பற்ற பூர்தருவும்வேண்டும்
புதிபபோகங்கொடுப்பப் புணர்ந்துதான்பிரியாராகி
மதியொடுமருவுமென்ன வாழ்வதுபோகபூமி ௫௮

போகபூமியியல்பு

வருமாதியநியஞ்சும்பார் மதித்தநல்லரிவைஞ்சம்பெம்
பொருளாரமேதலஞ்சம்மேற் புகழ்பெறுமேமலஞ்சம்

ஒருதேவகுருவைத்தேடே யுத்தரகுருவமென்ன
வருபோகபூமியாறு வகைப்படுமியல்பதாமே ௫௮

௭-மாதர்கள் ஏழு

வரும்பிராமிமற்றை மயேஸ்வரியொடுகௌமாரி
அருளுநாராணிவராகி யானவிந்திராணிகாளி
இருமையேழ்திருக்கள்பேரா மிதமெயுதிரமென்ப
பரவுகோலிமைச்சிறுமை பற்றுசுகிலநாமேனே ௫௯

௭-மன்னவரியல்பு-பிறப்பு

அறமொடுபொருளேயின்ப மன்பொடுபுகழ்மதிப்பு
மறுமையெனவேழுஞ்செங்கோன் மன்னவனவனேயாகும்
அறவுளதேவர்மக்க ளதிவின்மெய்விலங்குசொதுப்
பறவையேநாகரென்னப் பகறுபேழ்பிறப்பினபேரே ௬௰

௭-தீவு-சமுத்திரம்

இவர்தருநாவலோடே யிறலிவெருசைகௌஞ்சம்
புலிபுனைகமுகுதெங்கு புட்கரத்தீவேழின்பேர்
வுவாகருபபின்சாரோடே யொணமதுநெய்சிறந்த
ஙவமாதந்தயிபாலுப்பு நாட்டியகடலேழின்பேர்

௭-மேலுலகம்

நவமாம்பூவுலகமற்றும் நாட்டியபுவலோகங்கள்
சுவலோகமாகாலோகங்கள் சொற்றிடுஞ்சனலோகங்கள்
தவலோகந்தன்னிறேடு சத்தியலோகமென்ன
உவமானமில்லாமேலே ழுலகெனுமுலகநூலே ௬௨

௭-கீழுலகம்

அதலமேவிதலமற்று மடைவானசுதத்தோடு
ரிதலமோசாதலமபின் றிசழ்த்தியதராதலங்கள்
புதுபதாமகாதலத்தான் பொற்பகசீழேழுலோகம்
இதமிகுலுலகநூல்சொல் லீரேழாமுலகிதாமே ௬௩

௭-திரயவட்டம்

பெருகியகுளரின்வட்டம் பெருமணல்வட்டம்பொங்கி
எரிபால்வட்டமற்ற மெறிகதிப்படையினவட்டம்
பொறுவருமிரண்டுமாகிப் போர்த்திடும்புகையினவட்டம்
இருள்வட்டமபொருந்திவட்ட மென்பவேழ்திரயவட்டம் ௬௪

௭-திரயும் நதி

குறைவுறுகூடசாலம் மிரெளரவக்குமபிபாகம்
விழுபூதியன்னல்வெந்து விதித்தமாபூதியாமே

வழிகங்கையமுனையேன மதைசரஸ்வதிகாவேரி
விழுமியகுமரிகோதா விரியெழுநதியின்பேரே

௭-இருடிகள்-நாட்டுக்குற்றம்

புவிபுகழ்கும்பயோனி புலத்தியசங்கிராதன்
கவுதமன்வசிட்டமற்றைக் காசிபனொடுமார்க்கண்டன்
இவரெழுமுனிவர்வீட்டில் தொட்டியரேனங்கள்வர்
அவமழையானைகிளளை யாமிவைநாட்டேற்குற்றம்  ௬௬

௮-அசலம்

மன்னியவிபமத்தோடு மத்தரங்கைலவிர்தம்
கொன்வளர்நிடதமேத கூடமேலைவெற்புத்
துன்னியகந்தமாதனத்தொடுசூழ்வெற்பெட்டாம்
இன்னவையுலகநூலி னியற்கையேயென்றுகாண்மின்  ௬௭

௮-கடவுட்பாம்பு

மன்னுவாசுகியநந்தன் மருவியதக்கன்சங்கன்
பன்னியகுளிகனோடு பதுமன்மாபதுமன்மற்றைக்
கொன்னயிற்றழல்விழிக்காற் கோடகனென்றவட்டும்
முன்னியகடவுட்பாம்பு மொழியபிதானமாமே  ௬௮

௮-திக்குப்பாலகர்-சந்திரசூரியரிடம்

திண்டிறல்வானனங்கி செறியமனிருதியோடி
கொண்டிறம்வருணன்வாயுக் குபேரனீசானனென்ன
வேண்டிசையிலோசபால ரிவாபேர்சீட்டிசைதொட்டெண்ணும்
கண்டகீழ்பால்வடக்குக் கதிரொடுதிங்கட்காமே  ௬௯

௮-திக்குபாலகர் குறிமூர்த்தம்.

கொடிபுனைசீயஞ்சிறிக் குறைத்துவள்ளென்னுஞாலி
இடபமேசமுதையானை யேகுகாகந்திக்கங்கம்
படிகீர்திவாயவாகாயம பரிதியேயலிறவுதிங்கள்
அடல்புனையிபன்மானன்மற் றட்டமூர்த்தங்களாமே  ௭௰

௮-சித்தபூதம்

மன்னியவணிமாமற்றை மகிமாவேலகுமாவோடு
பின்னுறுபிராத்திவேநம் பெருப்பிராகாமியங்கள்
முன்னுறவீசத்தம்பின் முற்றியசிவத்துவந்தான்
உன்னியகாருபத்வ மாரிருகாண்கேசித்தி  ௭௧

அ-அயோகம்

இயமமேநியமமுத்தி யேற்றவாசனத்தோடுற்ற
கயனுறுபிராணுயாமம் நாட்டியபிரதயாகாரம
கயமுறுதியானத்தோடு தாரணைசமாதியெட்டும்
வியனுறுமபோகமென்றும விதித்தனாமதித்தநூலோர் ௭௨

அ-தருமாங்கம்

அறுமைபப்படாமைமற்றை யவாவின்மையுவர்ப்பொன்றின்மை
செறிகெடுமயக்கமின்மை கீளரப்பழியைககல
உறுதியினிறுத்தல்பேரன புடைமையேயறபவிளக்கம்
விறைதனதறத்துட்கூறு மெட்டுறுப்பிவைகளாமே ௭௩

இறைவன்குணம்

கடையிலாஞானத்தோடு காட்சிவீரியமேயின்ப
மிடையுறுநாமமின்மை விதித்தகோத்திரங்களின்மை
அடைவிலாவாயுவின்மை யந்தராயங்களின்மை
உடையவன்பாவனமறறிவ் வுலகினுக்கிறைவனாமே ௭௪

இறையவன்குற்றம்

மன்னியவறிவுகாட்சி மறைத்தல்வேதநியத்தோடு
துன்னுமோகனியமாயுத் தொடாநாமகோத்திரங்கள்
முன்னுறுமந்தராய மொழிந்தவெண்குற்றமாகும
இன்னவைதீர்ந்தோன்யாவன் யாவர்க்குமிறைவனாமே

அ-உடற்குறைசெய்யுளசைக்கணம்

குறளொடுசெவிடுமூங்கை கூன்மருள்குருடுமாமே
புறமுறுப்பில்லப்பிண்ட மோதியவெண்மையெச்சம்
நிறையுநீர்நிலனேதேயு நிகழ்சுடர்மதியைதாரை
பெறுமியமரனன்வாயுப் பேசியகணங்களெட்டே

நற்கணம்-துற்கணம்

நிலனொடுநீர்வெண்டிக்கள் தெரியமானன்னவெய்யோன்
உலவுதீவாயுவெண்ணென் றோதியகணங்களெட்டில்
நலமுறுகவிதைமுன்னர் நாட்டியநான்குநன்றும்
கலகயாம்பின்னர்நான்கு கணங்களுங்காணுங்காலே ௭௭

செய்யுளசைக்கணப்பொருத்தம்

நிறைபதுமூன்றுதானே நிலக்கணநேர்முன்னுகி
நிறையிணைபின்னராயி நீரேநேரிணைபின்னுகி
நிறைபதுமுன்னராயின் நெடியவெண்டிங்களென்ப
புறைவரநேர்முன்றுகிற் பொருத்திபவியமானன்றுன் ௭௮

௭-வது-கருவிளங்கனி-நிலம்-கூவிளங்கனி-நீர்- புளிமாங்காய் சந்திரன்-தேங்காய்-இயமானன்-ஆம்

இதுவுமது

நிரைநடுவாகமற்றை நேரிறுபாலும்வெய்யோன்
நிரையிறுபாலுமிற்க நேர்நடுதீயென்றாகும்
நிரையிறுவாகமற்றம் நேரிணைமுனனேவாயு
நிரையிணைமுன்னேராகி நேரிறில்நீளாகாயாம்

௭-து-கூவிளங்காய்-ஆதித்தன்-புளிமாங்கனி-அக்கினி-தேமாங்கனிவாயு-கருவிளங்காய-ஆகாயம-ஆம்,

௮-வைசியர்பண்பு

பெருவதுதெறுதலிட்டல் பேணிமற்றவைபகுத்தல்
இருதலஞ்சாமையென்று முடனறிகதொழுகல்வந்தே
உறவுபெயர்தனிமையாற்ற லுடன் மனிவிலனைபாதல்
மறுவறுபொழுதிற்கூடல் வசியர்தங்குணங்களெட்டே ௮௰

௮-கணிதம் சுபம்

குணநாரம்பரிரச்சந்தான் குறித்தபாற்கரமேமூலர்
தணவாதசனமேசஞ்சஞ் சலந்திபருகமெட்டுங்
கணியார்தவகணிதகநீபம் கவரிகண்ணடிதோட்டி
புணர்மினேமுரசுகும்பம் பொலிகொடிசுபமோரெட்டே ௮௧

௮-மெய்ப்பரிசம்-காட்டுக்குற்றம்

தட்டலேபற்றலொடு தடவலேநீண்டல்குத்தல்
வெட்டலேகட்ட லூன்றல் மெய்ப்பரிசங்களெட்டாம்
விட்டில்தன்னரசுநாவாய் மிகுமழைமிகுகாற்றேடே
நட்டம்வேற்றரசுகிள்ளை நாடுறுங்கேடெட்டாமே ௮௨

௮- மணம்

பிரமமேபிரசாபத்யம் பெருகுமாரிடமேதெய்வம்
கருகுகாந்தருவத்தோடே காட்டியவசுரமற்றும்
பரவியவிராக்கதங்கள் பைசாசமிருநான்கென்ப
பரவியவுலகியற்கை வகுத்திடுமணங்களின்பேர் ௮௩

௮-புறத்திணைமாலை.

நிரைகவர்த்திடுதல்வெட்சி நிரைமீட்டல்கரந்தையென்ப
வேறுவமேற்சேறல்வஞ்சி மீட்டெதிருனல்காஞ்சி
வருகெச்சிபுரிசைகாத்தல்வளைத்திட லுழிஞையாகும்
பொருவதுதும்பையென்ப பேர்வெல்லல்வாகையாமே ௮௪

௮-திசையானை

களிற்றைராவதஞ்சீர்காட்டு புண்டரீகங்கள்தானும்
குளித்தவாமனம்பொன்னேடைக் குமுதமஞ்சனம்வெம்போரை
வினைதிடுமபுட்பதந்த மேவியசார்வபௌமம
மிளிற்றுஞ்சுப்பிரதீபந்தான் பெருத்தவெண்டிசையானைப்பேர்

௯ நீர்த்தவர்க்குச்செய்புண்ணியம்

எதிர்கொளல்பணிதலோடு மிருக்கைதாள்கழுவல்நீரும்
புதுவிரைநறும்பூத்தூபம புனைவிளக்கடைவேபோற்றல்
விதியினவாளரவுதோலும் விடமுனீத்தென்னநீத்த
வதிகருக்கமுதமேந்த லவைநவபுண்ணியந்தான் ௮௬

௯-பூமிபாககண்டம

வடபாலேதென்பால்கிழ்பால் வகுத்தமேல்பால்விதேகம்
வடபாலேதென்பால்மீது வைத்திடுமிரேவதங்கள்
வடபாலேதென்பால்மீது வைத்திடும்பரதத்தோடு
வடிவாமத்திமங்கண்டங்கள் வருநவகண்டமாமே ௮௭

௯-தாரணை

வைத்தநாமகள்வாளை வச்சிரஞ்சத்திரங்கள்
சுத்தமேவத்துவோடு சதுரங்கஞ்செய்புளெட்டும்
புத்தரேகாணப்பட்ட பொருட்குறைநிறைவோரென்று
ஒத்ததாரணைகளென்ப தோதுமொன்பானுமீதே

௯-நடனதாளம்

அடிவினிற்சாமமோடு மருமவேயட தாளம்மேற்
படிமமேயடைவில்வந்து பற்றுமட்டந்துவங்கள்
விடமமேசயமேமற்று மேவியநிருத்ததாளம்
நடையுறுபலவரோது நவதாளமிவைகளாமே ௮௯

௯-இரத்தினம்

மரகதம்பவளம்நீலம் வச்சிரப்பதுமராகம்
விரவியதரளமேகோ மேதகம்புருடராகம்
உரவியகாந்திவிட்டே யுமழ்வயிடூரியந்தான்
பெருகியநவமணிக்குப் பெயரிவையாகுமென்ப ௯௰

௯-இரசம்-௰-சிற்பத்தொழிற்குறிப்பு

நல்லசிங்காரம்வீரம் நகைசாந்தங்கருணைகுற்சை
ஒல்லுமற்புதம்பயத்தோ டுறுகோபமிரதமொன்பான்
கல்லுலோசமமண்செங்கல் கண்டசர்க்கரைமெழுக்குச்
சொல்லியமரமேதந்தஞ் சுதைவன்னஞ்சிற்பகணமே ௯௧

௰-அங்கம்துவர்.

கெடுமலையாறுநாடூர் நீண்டதார்புரவியானை
கொடிமுரசுடனேனேறுங் கூறியதசாங்கமென்ப

படிபுனைகாவலேழும் பழநாற்பான்மருதத்தக்கா
கொடுமாவின்றளிர்புத்தெனபு லோதியதுலரின்பேரே கஉ

௰-அரி-அவதாரம்.

காமமீனாமைபன்றி நாரசிங்கத்திஞேடு
வாமனன்பரசுராமன் வானவர்தொழுமிராமன்
வாய்பலிவாசுதேவன் பலதேவனுடனேகற்கி
ஆமிவைபத்துநதானே யரியவதாரமென்ன கங

௰-வேளாளர்செய்கை

வருவிருந்தோம்பல ணை வழிநிற்றலொழுக்கமுக்கம்
கரிசலகற்றினைமையென்றங் கைக்கடன்றாற்றலன்றே
உரியதாமரையிறுத்த லொற்றுமைக்கோடலெபோற்றல்
விரவுபாளவினைதொடங்கள் வேளாளர்செய்கைபத்தே கச

௰-பெண்களால்மலருமரம்

ஏடவிழ்வகிழ்சுவைக்க வெழிற்பாலைநன்புகூடப்
பாடலநிநதிக்கத்தேம படிமுல்லைநகைக்கப்புன்னை
ஆடகீள்குராவணைக்க வசோகுதைத்திட வர்சந்தி
பாடமாப்பார்க்கவார்சண் பகநிழற்படர்ந்தளிக்கும் கரு

௰அ-தேவர்சாதி.

விரவியவமரர்சித்தர் விஞ்சைபர்பசாசர்பூதர்
கருடகின்னரரியக்கர் காந்தர்வர்சூராதயித்யர்
உரகராகாசவாச ருத்திரர்சுத்தவர்மோனர்
கிருதாகிமபுருடர்விண்மீ னீள்கண்பூவராமே கசு

ரு-இராஜபட்சத்தார்

தநித்தமந்திரிபுரோதர் தவத்தொழிற்றாதனொற்றன்
எடுத்துவநகிருந்தசேனைக் கிறைவனைந்துழுவெண்ணுருகும்
படைத்தொழிலோர்நிமித்தம் பார்ப்பவராயுள்வேத
ரடுத்தநட்பாளர்பார்ப்பா னைவகையுருதிச்சுற்றம் கஎ

அ-இராஜசகாயர்

கரணத்திற்றிரள்கள்வாய்ந்த கடைகாப்போர்நகரிமாக்கள்
தருபடைத்தலைவர்மற்றுத் தன்கிளைசுற்றமயானை
புரவியூரவோரெயன்று போற்றுகாவிதிகளெட்டும்
விரயவெண்பேராயும் வேநசருக்கமைந்ததாமே கஅ

௰அ-உடற்குற்றம்

பசியகிசாபிடியுள்ளல் பயமேனைபுறவுழைப்புக்
கசிவுநீர்வேட்டலவேண்டல் கதமதங்கேசுத்தோடே
யொசிபுநோய்பிறப்பிறப்போ டுவகையேயிரக்கமின்ப
மிஞ்சயுமீரொன்பானகுற்ற மிலைவதிர்க்தோனிறைவனாமே ( )

௧அ புராணம்

மச்சமேகூர்மஞ்சைவம் வைஷ்ணவம்வராகம்லிங்கம்
பற்பம்வாமனமேகாந்தம் பவுஷிதமாக்கினேயங்
கற்புளகிரமங்கைவத் தம்மேமார்க்கண்டேயத்தோ
டுற்றபாகவதமேகா ருடம்பிரமாண்டநதொன்னூல். ௯

எழுபிறப்பில் எண்பத்திநான்குலட்சம் யோனிபேத விபரம்

ஊர்வனபதினென்றாகு மொன்பான்மானிடர்தம்பேதம்
நீர்வினில்விலங்குபுள்ளு மப்பத்தாநெடியதேவர்
சாருமீரேதாலேந்தே தாபரயோனிபேதம்
ஆருமெண்பானன்கோடே யமைந்தநூறாயிரங்கள் ௯௧

ரு-மன்மதபாணம்- அதன்பண்பு

அசையிலாவனசஞ்சூத மசோகமேமுல்லைநீலம்
ஒசியுவேள்கணைகளாகு மூன்மதத்தமதனமோகம்
வசையில்சககாபத்தோடு வசிகரணெங்களும்பேர்
இசைகள்மற்றிவைகள்செய்தே யிடுமவத்தையுமேற்சொல்வாம் ௯உ

மன்மதசாண அவஸ்தை,

பெருகுசுப்பிரயோகம்பின் பிறந்தவிப்பிரயோகம்மேல்
மருவியசோகமோக மரணமூமுறையேசெய்யும்
பெருகுசுப்பிரயோகந்தான் பேச்சொடுநினைவுமாகும்
விரவுவிப்பிரயோகந்தான் வெய்துயிர்த்திரங்கலாமே ௯௩

இதுவுமது.

சோகமேவெதுப்பினோடு துய்யவெய்தெவிட்டல்செய்யு
மோகமேயழுதலோடு மொழிபலபிதற்றதென்ப
வேதமாமரணந்தானே மிகுமயக்கோடிரப்பாம்
பாகடர்சொல்லிநல்லாய் பகருநூலியல்பிதாமே ௯௪

உஅ-செய்யுளலங்காரம்.

உருவகமுவமையோடே யூன்றியவடிமடக்கே
வரிசுடர்நிலைமடக்கே வேற்றுமைவெளிப்படுத்தல்
மருகுயநோக்கேயுட்கே வருந்தொகைமொழியேமற்றத்
தருமிகமொழியேவாழ்த்து தன்மம்வேறருத்தம்வைப்பே ௯ரு

இதுவுமது

காப்பரேநிலையிலேடை மறைந்திடுநிலையில்வார்த்தை
திறுத்திடநிலையிற்கூட்ட முலமாருபகத்தினோடு
வெறுப்பிலாமகிழ்ச்சிசெய்து மிகுநுவலாநுவற்சி
உறுத்தியேயிருந்தலக்கிட் டுயர்மொழிதெரிசனங்கள் ௯௬

## இதுவுமது.

வுறைகெழுபாராட்டோடே யோங்கியநிலையேயையம்
விரவியநிலைவாழ்த்தென்ன விதித்திடுமிருபத்தெட்டு
மருவியவலங்காரத்தை வரிசையிற்பாதிவல்லோன்
புரிவுறுமெழுத்துச்சொல்லும் பொருள்யாப்போடிவையறிந்தோன்

## ௫-தானப்பொருத்தம்

பாலனேகுமரன்மன்னன் படுமூதிர்க்கிழவன்சாவு
கேவலுந்தன்பேரெழுத்தே குறித்ததுமுதலாக்கொள்க
எலுமுன்னெழுத்துமூன்று மின்பம்பன்னிரண்டுந்தீதாம்
சாலுமூவகைச்சீர்தானே சாற்றியகவிதைக்கின்பம் ௱௮

## ௨௭-நாட்பொருத்தம்

தனதுநாளும்பின்னாளும் சார்ந்திடுநாலுமாறும்
வினவியவேட்டொன்பானும் விருத்தமொன்றில்லைதன்னால்
நினையுமூன்றுடனைந்தாநா ளேழாநாளிவைபொருந்தா
நினையுமிம்மூன்றொன்பானு னேர்படுமூன்றுவட்டம் ௱௯

## ௫-முற்பக்கம்பட்சி.

அகரமேயாதியாக ஐந்துகுற்றெழுத்துந்தானே
புகல்வல்லூராந்தைகாக்கை போர்க்கோழியொடுகலாபி
தொகுமுண்டிபோக்குவேந்து தூக்கமேநீக்கஞ்சாவாம்
பகருமைந்தெழுத்திலியாது மற்றினுமதுவேமுன்னும் ௱௰

## பிற்பக்கம் இதுவுமது

பிற்பக்கமாகில்வேறு பேதிக்குமேதேவென்னில்
அற்புதவுண்டிசாதே யடுதுயிலரசுபோக்கு
பொற்புறுமரணந்தூக்க மில்லாதபொழுதையோர்ந்து
பற்பலசெய்யுட்டான பகர்ந்திடின்மிகுந்தநன்மை ௱௰௧

## ௰௮-மங்கலப்பொருத்தச்சொல்

சீர்மணிபருதியானை திருநிலமுலகுதிங்கள்
கார்மலைசொல்லெழுத்துக் கங்கைநீர்கடபூத்தேர்பொன்
ஏருறுமிவைமூவர் மிதிற்பறியாயப்பேரும்
ஆருமங்கலச்சொற்செய்யு ளாய்ந்துமுன்வைக்கநன்றாம் ௱௰௨

## தமிழாசிரியராவர்

இந்தநல்லிலக்கணத்தி லிசைந்திடுதுறையும்வல்லோன்
நந்தமுத்தமிழினோடு நாற்கவிபயிலவல்லோன்

வந்துநற்குலத்துதித்தோன் வடிவமோடொழுக்கமுள்ளோன்
அந்தவாறையாண்டேகி யாண்டெழுபானீங்காதோன் ௱௰௩

ஒருவர்செய்யுட்கோடன்மரபு.

வழுக்கடர்கவிதைதன்னை வகையிலார்கொள்ளுங்காலைக்
கொழுப்பில்தோரணங்கள்நாட்டிக் கொடிமாடமெடுத்துயர்த்தி
விழுத்தகுகோலஞ்செய்து மென்றுகில்விரித்தபின்னைத்
தெழுத்திடும்பல்லியந்தான் முகிலெனத்திமிதிமென்ன ௱௰௪

இதுவுமது

அட்டமங்கலங்களேந்த அரிவையர்பலரும்வாழ்த்த
மட்டவிழ்பாளைவேய்ந்த மணிக்குடத்திபமல்கப்
பட்டபுல்லுணூழைத்த பாலிகைவிதானப்பந்த
ரிட்டமாமணையிற்சானறே ரியல்புளரிரீயபின்னை ௱௰௫

இதுவுமது

மன்னுமாசனத்திருந்து வளமலிகவிதைகேட்டும்
பொன்னெடுதுகிருந்தூசும் பூண்முடிகடகத்தோடும்
இன்னவைபலவுமீய்ந்திட் டேழடிபுலவன்பின்போய்
நின்மேனநிற்றன்மன்னர் நிலமிசைவழக்கிதாமே ௧௰௬

இலோபியர்க்குச் செய்யுட்செய்வன

பாட்டுடைத்தலைவன்றானே பரிசிலீயாதகாலை
மீட்டொருபெரியனூர்பேர் வேறுசொல்லியற்றிச்செய்யில்
ஈட்டுசெல்வங்கள்பொன்றி யீங்கிவன்றிருவுமாய்ந்து
காட்டியவவனுக்காகு நவின்றனூல்வழக்கிதாமே ௧௰௭

இதுவுமது- உலோபசம்சாரம்

பரிசிலீயாதபாவி பாமாலைசெம்பூச்சூடி-
வரிபரவுரைவன்மீக மாகளிமுன்றினன்னில்
உரியகீண்மனைப்புறத்தி ளொள்ளெரிகொளுத்தில்வீயுந்
தெரியுமூவாண்டிலொன்றே செப்பினன்முனிவன்றானே ௧௰௮

அம்பிகாதர்மம்.

ஆதுலர்சாலையையம் அறுசமயத்தோர்க்குண்டி
ஓதுவார்க்குண்வினேடான் வத்திரமுடனேசேலை
மாதுபோகம்மகப்பால் மகப்பேறுமகவளர்த்தல்
வேதைநோய்மருந்துக்கொல்லா விலைகொடுத்துயிர்நோய்தீர்த்தல்

இதுருமது

கண்ணாடிபிறரிற்காத்தல் கன்னிகாதானங்காவே
வண்ணார்நாவிதரம்பட்டர் மடந்தடங்கண்மருந்து
தண்ணீர்செய்பர்ந்தகோலத் தலைக்கெண்ணெசிறைச்சோறேடு
பண்ணுனவிலங்கூணல்கல் பசுவின்வாயிறைகொடுத்தல் ௧௨௰

இதுவுமது

அறவையாம்பிணமடக்க லறவைத்தூரியம்வருந்தா
ரிறுவியேயிடம்விடாமல் நிறைபத்தின்பண்டநல்கல்
உறுதியாவுரிஞ்சுநின்ற தரியிவைபோதுமெண்ணான்
கதநிலையபிதானங்க ளம்பிகைசெய்யுமாறே ௧௨௧

ஓரறிவுமுதல் ஆறறிவுவரைக்கும்

உற்றறிபுலனென்றாற்புன் மரமேயோரறிவிற்சீவன்
முற்றுமீரறிவிற்சீவன் முரணந்தேயாதிநாவால்
சென்றன்மூவறிவிற்சீவன் சிதலெறும்பாதிமுக்கால்
சொற்றநாலறிவிற்சீவன் றும்பிவண்டாதிகண்ணால் ௧௨௨

இதுவுமது

மானவர்மனிதர்கீழ்போய் மாகியநரகரோடும்
கானுறைவிலங்குபுள்ளூ காட்டுநாலறிவினேடே
ஊனமில்செவியுமாங்கே யுறுவினையறுவிற்சீவன்
மானமர்நோக்கிநல்லாய் மனமுமொன்றதிகமாமே ௧௨௩

காப்புக்குமுன்னெடுக்குந் தெய்வம்

காப்புக்குமுன்னெடுக்குங் கடவுடான்மாலேயாகும்
பூப்புனைமலரின்செல்வி புனைபவனுதலானும்
காப்பவனுதலானுங் கதிர்முடிகடகத்தோடு
வாய்ப்பதாம்தரணிபூணால் வரிசையிற்புனைதலானும் ௧௨௪

ஆண்பாற்பிள்ளைக்கவியுறுப்பு.

வருமுறைகாப்பிரண்டு மதியைந்துமதிசெங்கீரை
தருமமுதூட்டலோடு தால்பாடலேழாந்திங்கள்
பாவுசப்பாணியொன்பான் பத்திரோடொன்றுமுத்தம்
வருகெனவிளித்தவாண்டு வரைமதியினியிசொன்பான் ௧௨௫

இதுவுமது

சிறுபறைகொட்டல்வேறு சேர்ந்தசோளகமிரண்டு
முறைமையிராண்டினேடு மூவாண்டாம்நாலாமாண்டில்

உருசிறுதேருருட்டல் ஒன்சிற்றில்சிதைத்தலென்ப
அறிவுறுமைந்தாமாண்டில் அச்சமற்றுறுத்தலாமே ௧௨௬

இதுவுமது ஆண்பாற்கும் பெண்பாற்கும்

ஊசலோடொன்பதாண்டாம் ஒளிர்பூணூல்புனைதல்பத்தாம்
காசறுபன்னீராண்டிற் கச்சொடுசுரிகைசாத்தல்
சேசியவாண்பாலுற்ற பிள்ளைபாட்டாகும்வெண்பா
லாசின்முன்னுரைத்ததெல்லா மாண்டெல்லைவரையுமாமே ௧௨௭

இதுவுமது

முந்தியமூன்றுமாண்டிற் குழமகன்மொழிதலிப்பா
லைந்துதொட்டேழாமாண்டில் லனங்கனேன்படைவேநோற்றல்
நந்தியபன்னீர்தோய்தல் நாட்டியபறவையாடல்
உந்தியசிறுசோறட்டல் சிற்றிலோடுசேலாமே ௧௨௮

பேடியதிலக்கணம்

இச்சையாற்பேடிசெய்யு மிலக்கணமிப்பாற்கேண்மோ
நச்சுவேபேசலோடு கல்லிசையோர்ந்துநிற்றல்
அச்சமொன்றில்லாதாகி யாண்பெண்ணுமடையியற்றல்
உச்சியிற்கையைவைத்து லொருகரந்தானேவீசல் ௧௨௯

இதுவுமது.

விழிகளைவேறுய்ச்செய்தல் வெம்முலைநலித்துநிற்றல்
சுழலவேநோக்கல்நக்கல் நாணறெருந்தோமென்றுரைத்தல்
கழிநடம்பயித்தல்வேறு காரணமல்லாகோபம்
அழுதிடல்நடுநடுங்கி யாங்கொருபக்கம்பார்த்தல் ௧௩௰

இதுவுமது

இரங்குதல்வருத்தல்யாரு மிரங்கவேபேசிக்காட்டல்
குரங்கலதோதாட்டல்கூடல் கூவிளிகொண்டுநிற்றல்
மருங்கினிற்கையைவைத்தல் வரங்குதல்பாங்கிதன்னைத்
திருந்தவேசெய்தலெல்லே தென்றலுஞ்செய்கையாமே ௧௩௧

மறைந்துகாணுங்கோள்கள்.

பருதியின்திரண்டுசீறும் பைநாகக்கேளிரண்டே
டிருசுடர்வளைந்துசூழும் பரிவேடம்நெடுகநீண்டு
பெருகியவெண்மீன்வானிற் பெருந்தூமமெதிர்ந்தவில்லு
கருகுமிவ்வெல்லாம்பேசிற் கரத்துறைகோள்களாமே ௧௩௨

முகில்-எ-மணிநீர்பொன்பூமஞ்சல் நீர்பொழிவது

பொழியுமாவத்தமெங்கும் போர்த்தயுட்கலஞ்சங்காரம்
கழியுமாசவனமேநீர்க் காரியேருதிசொற்காரி
மொழிசிவ்வாகிடதமென்ன முகில்கலேரேழினமும்
அழிவுகாலத்திற்றேன்றி யடர்வனபடர்பவானே ௧௩௩

௨௧-இராச அலங்காரம்

முடிகுடைகவரிதோட்டி முரசுசக்கரமேநாவாய்
கொடிமதல்தோரணநீர்க்கு குடமலேமாலேசங்கு
கடலொடுமகரமாமை கயவணையரிமரத்திப்
பிடபமாசனமுமேமு மிறைதிருப்பொறிகளாமே ௧௩௪

ரு-சுவைமுதலியவற்றால்மாய்வன்

சுவையினமீனளிநாற்றத்திற் றும்பியேபரிசந்தன்னில்
நவையிலாவசுணந்தானே நல்லிசைதனிற்பதங்கம்
உவகையர்லொளிவைவெட்டே யுயிரினேழக்குமைந்தாம்
இவையெலாமிடைபொர்தம்பா லாருயிரிழந்திடாதார் ௧௩௫

௰௨- உயிர்மெய்வேதனே

அனலொடுசீதம்வாத பொசிப்பிக்கும்பசியேதாக
புனல்சளிவிடத்தையந்தார் பொசிப்பிக்கும்பசியேதாகம்
நனிமிகவிடம்பொறுமை நாட்டுநோயுணப்பொறுமை
இனேயும்வேதனேயிராறு மெய்திடுர்தும்பமென்ப ௧௩௬

அருகன்சிவன் வாகனுதிகள்

அருகனதூர்திதானே யம்புயம்படைநற்காட்சி
பொருகியஞாலசீலம் பொருக்கொடியருளேயென்ப
மருமலர்க்கொன்வையார்க்கு வந்துவாகமிடபமாகும்
பரசொடுகடியசூலம் பிணுகம்விற்சடைகலாமே ௧௩௭

மால்பிரமன்வேதியர்வாகனுதிகள்

கரியமான்துவசமூர்த்தி கலுழனென்றுரைக்கப்பார்த்தே
வரிசிலேயாழிசங்கு வாள்கதைபடையைந்தாகும்
பிரமன்தூர்தியன்னம் பெரும்படைபாசமாகும்
அருமறைக்கொடியேயாகு மந்தணர்தமக்குதாமே ௧௩௮

பலதேவன்-இயமன்-குபேரன்-ஊர்தி- யாதி

பரிவுளபலதேவர்க்குப் படைகாஞ்சில்கொடியேபெண்ணே
மருவைவேயமன்றனூர்தி யெறிபடைபாசந்தண்டாம்

கரியதோர்கூற்றினுக்குக் கடும்படைகணிச்சியாகும்
புரிநரவாகனம்பூமி புட்பகங்குபேரனூர்தி ௧௩௯

சூரியன்-சந்திரன்-சுப்பிரமண்ணியனூர்தியாதி

குறைவிலாதனிக்காற்பெற்றோர் கூறியவருக்கனூர்தி
நிறைதருமதியினூர்தி நீள்முத்துவிமானமென்ப
அறுமுகனூர்திதானே யானையுமயிலுமென்ப
அறுபடைவேலாமற்றை யொண்கொடிகோழியாமே ௧௪௰

இந்திரனூர்திமுதலியவைகள்

கரியயிராவதம்பூங் கற்பகக்காவேசோலை
உரியவெம்பரியின்பேரே யுச்சையுச்சரவமாகும்
மருவுமண்டபஞ்சுதன்மை காளிகைவசந்தனென்ப
பெருகியவுருவுமற்றைப் பெருங்கொடிபுறந்தார்க்காகும் ௧௪௧

காளிகலதி-ஊர்தி-முதலாகிய

அழகியகாளியூர்தி யாளியேதுவசம்பேயாம்
பழுதறுதுர்க்கைபற்றும் படைவாளங்கலையேயூர்தி
செழுமமூதேவியூறுங் கிளர்ந்தவாகனத்திநாமம்
கழுதையாம்படைத்துடைப்பங் காக்கையைம்பதாகைதாமே ௧௪௨

சப்தமாதர்-ஊர்திமுதலிய

அந்தமேயிடபந்தோகை யணிமவில்கலுழன்சீயம்
பின்னியல்யானையோடு பேயெழுபெண்களூர்தி
மன்னுனூன்முறையினுகம் வார்சிலைசத்தியாழி
துன்னியகலப்பைவச்ரஞ் சூலம்வெம்படைகளாமே ௧௪௩

அரசர்-மூவர்-புலவர்வூர்திமுதலிய

மன்னியசேரனுக்கு வரிச்சிலைகொடிபனந்தார்
பொன்னியத்துதைசோழற்கே புலிக்கொடியாத்திமாலை
தென்னவன்றனக்குத்தானே சேற்கொடிவேப்பந்தாரம்
பன்னியசேழல்வேழப் பதாகையும்புலவருக்கே ௧௪௪

பட்டத்துயானை இலக்கணம்

காலொருநாலுகோசம் கைவாலேழ்நிலத்திற்றோய்ந்து
பாலொடுசங்குபோலும் பதத்துகிர்விதத்திற்சூழ்ந்து
வாலொடுகால்மெல்கைவெண் மருப்பினுலுயிரைக்கொல்ல
ஏலவேழுயர்ந்தோன்பானின் டறைந்துமுழத்ததாதி ௧௪௫

இதுவுமது.

பெருமுறைமுன்புயர்ந்து பின்பணிந்தழகிதாய
தறுகண்ணதாசிச்சூழி சாந்தமத்தகத்ததாகி
முறநிகர்கன்னதான முறிமால்பானைதானே
அறநெறிசெலுத்துஞ்செங்கோ லரசுவாவாகுமென்ப ௧௪௬

பட்டத்துகுதிரையிலக்கணம்

மாதர்தம்மனத்தையொத்த மனத்ததாம்வாளைவுற்ற
கோதில[illegible]லைபோகக் கொழுந்துளசெவியதாகிப்
பீத[illegible]பின்னிறுத்துப் பகர்முகம்பான்மைத்தாக்கி
ஓதுமெண்பத்திரண்டங் குலியுயர்பரிமன்னர்க்காம் ௧

பதாதி-சேனாமுகம்-குமுதம்

தந்தியேதேரோரொன்று சாதியாம்புரவிமூன்று
வந்திடும்படைஞர்மூவர் வகுத்திடும்பதாதியென்ப
உந்துமப்பதாதிமுன்றே யுமிற்சேனாமுகமென்றாகும்
முந்துசேனாமுகந்தான் மும்மடிகுமுதமாகும் ௧

கணம்-வாகினி-பிரளயம்-சமுத்திரம்

மருவியகுமுகமூன்று மடிநான்கேகணகமாகும்
கருதியகணகன்மூறுங் காட்டியவாகினிப்பேர்
பெருகுவாகினிதாமூன்று பிரயளமாகுமென்ப
மருவியபிரளயமூன்று வார்சமுத்திரமென்றாமே

கரிசங்கு-அணிக- அக்றோணி

சொல்லியசமுத்திரந்தான் மும்மடிகரிசங்கென்ப
வல்லமற்றதுமூன்றாமே பணிகமாமணிகமூன்று
வெல்லுமக்குரோணியென்று விளங்கவேயளந்தநூல்கள்
ஒல்லுமற்றுவைத்தவாரீ துலகறாலியற்கைதானே

அதியுகம்பிரமம்கோடி அற்புதம்.

ஒருபதினாயிரமபத் துறைபதியுகமென்றாகும்
வருமதியுகந்தான்மீள மதித்தநூறாயிரங்கள்
பிரமமாம்பிரமம்நூறா யிரமதுகோடுதானே
அரியதோர்கோடிபத்தா மற்புதமென்றுஞ்சொல்லும்

கணகம்-கற்பம்-நிற்பம்-யங்கம்-சமுத்திரம்

கருதறுகோடிநூறு கணகமாங்கணகம்பத்துப்
பெருகியகற்பமாகும் பேணுமக்கற்பம்பத்தும்
தருமிகுநிகற்பமாகும் நிகற்பமீறைந்துகங்கந்
திரமுளசங்கம்பத்து சமுத்திரமென்றேசாத்தும் ௧௫௨

இப்பன்னிரண்டாம்நிகண்டில்-விருத்தத்தொகை

உரைத்தவிப்பல்பேர்கூட்டத் தொருபெயர்த்தொகுதிதன்னில்
விருத்தமூவைம்பதின்மேன் மிகுதிமூன்றவையுஞ்செய்தான்
திருக்கிளர்குணபத்திரன்றாள் சென்னியிற்சூடிக்கொண்டோன்
மருக்கிளர்பொழில்சூழ்வீரை மன்னன்மண்டலவன்றானே ௧௫௩

பன்னிரண்டாவதுநிகண்டு முற்றிற்று

---

